உ

குருமயம்.



யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

வரதபண்டிதரவர்கள் இயற்றிய

# குருநாதசுவாமி
# கிள்ளைவிடுதூது.

இஃது

யாழ்ப்பாணத்தில் உடுவில்வாசரும்,
இந்தியாவில் கண்டரமாணிக்கம் விவேகாநந்தர்சபை
ஸ்ரீ ராமகிருஷ்ணகலாசாலை என்பவற்றின்
ஆசிரியரும் ஆகிய

தமிழ்ப்பண்டிதர்: வ. மு. இரத்நேசுவரையரால்

பரிசோதித்தபடி

ச. இ. சிவராமலிங்கையரால்

கோக்குவில்
சோதிடப்பிரகாச யந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

(இரண்டாம் பதிப்பு.)

1921.

சுபமயம்

# உபந்நியாசம்.

திருமூலநாயனாராலே சிவபூமியென்று விதந்துகூறப்பட்ட ஈழமண்டலத்திலே செந்தமிழ்மங்கை தங்கிவீற்றிருக்கும் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த சுன்னாகம் என்னுமூரிலே, ஏறக்குறைய 200-வருஷங்களுக்கு முன்னே ஸ்ரீகாசியினின்றும் வந்து எழுந்தருளியிருந்த, எமது குலசிகாமணியாகிய வரகவிப்புலமை வரதபண்டிதரவர்களால் இயற்றப்பட்ட நூல்கள்: சிவராத்திரிபுராணம், ஏகாதசிபுராணம், கிள்ளைவிடுதூது, பிள்ளையார்கதை, வைத்தியசாஸ்திரமாகிய அமுதாகரம் முதலியன. இவைகளேயன்றி, வேறு தனிப்பாக்களும், திருவூஞ்சன்முதலியனவும் இவராற்செய்யப்பட்டிருக்கின்றன.

மேலே கூறப்பட்டவற்றுள் எள்ளருஞ் சிறப்புடைய கிள்ளைவிடுதூது என்னும் பிரபந்தத்தைப் பரிசோதித்துப் பிரகடனஞ்செய்யுமாறு எம்மைப் பலர் வேண்டினாராதலின், யாம் சில பொருத்தமான மூலபாடதிருத்தங்களைக் காட்டியும், சில அருஞ்சொற்பொருள்களைக் கூட்டியும் அச்சிடுவித்தாம். குற்றங்களைந்து குணமளைநதொழுகல் கற்றோர் கடனாகும். நிற்க;

இக்கிள்ளைவிடுதூது கீரிமலைச்சேயன்றுறையைச் சேர்ந்த "கண்ணியவளை" என்னுமிடத்திலெழுந்தருளிய குருநாதசுவாமிமீது இயற்றப்பட்டது. கிள்ளைவிடுதூது என்பது கிளியைத் தூதுவிடுதலைக் கூறும் பிரபந்தம். தூதாவது: ஆண்பாலும், பெண்பாலும் அவரவர் காதலைப் பாணன்முதலியவுயர்திணையோடும், கிள்ளைமுதலிய அஃறிணையோடுஞ் சொல்லித் தூதுபோய் வருவாயாக என்று கலிவெண்பாவாற் கூறுவது.

இந்நூலைப் பரிசோதிக்கின்றுழி எமக்கு நேர்ந்த சந்தேகங்கள் பல. அவைகளையெல்லாம், எமக்குச் செந்தமிழ்ப்பாஷையைச் செவியறிவுறுத்தியவரும், வடமொழி தென்மொழியாகிய இருமுதுமொழிகட்கொருபெருந் தலைமைத் திருவமர்ந்திலங்கும் வித்துவசிரோமணியும் ஆகிய சுன்னாகம் ஸ்ரீமத். அ. குமாரசுவாமிப்புலவரவர்கள் தீர்த்தார்கள். அவர்கள் எமக்காகப்புரிந்த கருணையின் மாட்சி கழறுந்தரத்ததன்று.

இதனை அழகுற அச்சிடுவித்து வெளிப்படுத்திய ஸ்ரீமத். ச. இ. சிவராமலிங்கையரவர்கள் நன்றி என்றும் பாராட்டற்பாலதாகும். சுபமஸ்து.

உடுவில்;
துர்மதிஞு
ஆனிமீ

வ. மு. இரத்தினேசுவரையர்.

# சிறப்புப்பாயிரம்.

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்
வித்துவசிரோமணி

## ஸ்ரீமத். அ. குமாரசுவாமிப்புலவரவர்கள்

சொல்லியது.

ஆசிரியவிருத்தம்.

கொள்ளுநெறிக் கண்ணியநல் வளையுறையுங் குருநாத குகனூர் மீது
தெள்ளியசீர் மறைவல்லோன் வரதனெனும் பண்டிதர்கோன் செய்துவைத்த
கிள்ளைவிடு தூதுபரி சோதனைசெய் தச்சினிடைக் கிளரச் செய்தான்
தள்ளரிய வவன்மரபில் வருரத்தி நேசரனுந் தமிழ்வல் லோனே.

---

நவாலியம்பதி உபாத்தியாயர்

## ஸ்ரீமத். க. சோமசுந்தரப்பிள்ளையவர்கள்

சொல்லியவை.

விருத்தம்.

உருவளர்தா மரைவளருந் திசைமுகனு நெடுமாலுந் தேடிக்காணு
மருவளர்பூங் கொன்றைமுடி மலர்ப்பாதத் தெம்பெருமான் மகிழ்ந்து வாழும்
பெருவளஞ்சேர் காசியொரீஇ யெழுந்தருளி யாழ்ப்பாணம் பிறங்கு சுன்னை
அருவளப்பொற் பதிவளர்ந்தான் மாவரத ராசனெனு மந்தணாளன். (௧)

பன்னுமறை விப்பிரர்கள் சிகாமணியா யுலகமெலாம் பரவ வாழ்வான்
மன்னுயிர்கட் குறுதிதரும் தமிணூல்கள் சிலவியற்ற மனததுட் கொண்டு
முன்னவனாங் கணபதியின் றிருக்கதையே முதலாக மொழிந்த நூல்கள்
கன்னல்கசத் திடவினிக்குங் கலைத்தமிழ்ப்பா வாலங்நாட் கழறினனே. (௨)

தெள்ளுதமிழ்ப் பாவாணர் செவியமுதாய்ச் செய்தளித்த சிறந்த நூலுட்
கிள்ளைவிடு தூதெனப்பேர் கிளத்துபிர பந்தமொன்று கேடுறாமல்
உள்ளகர விகிதவெழுத் களைந்தெடுத்துத் தூய்தாக்கி யுயர்ச்சி தங்க
வெள்ளலிலா வகையெழுதா வெழுத்திலிடு வித்தானிங் கெவனோ வென்னில்.
முன்னமுறை மாவரத ராசனெனுங் கவிஞர்பிரான் குலமா முந்நீர்
தன்னிலெழு கலைமதிய மாரியஞ்செந் தமிழிரண்டுந் தன்னே ரில்லாச்
சுன்னைவரு வித்வசிகா மணிகுமர சுவாமியெனுந் தூயோன் றன்பால்
நன்னயமோ டோதியுணர்ந் தோனரன்றா ளுளக்கமல நாட்டுமேலோன்.(௩)

சங்கோல மிடும்பழனத் தடவயல்சூ ழுடுவினகர் தன்னில் வாழ்வோன்
மங்காத தமிழ்ப்புலமை யாசிரியத் தலைமையாளன் மறைநூல் வல்லான்
அங்காத லுடன்முருகே சையனளித் திட்டதிருக் குமரனன்பிற்
பொங்கோத வேலிநிலம் புகழுமிரத் நேசபூ சரனென்பானே. (௪)

---

உ

குகமயம்.

குரவே நம:



குருநாதசுவாமி

# கிள்ளைவிடு தூது.



காப்பு.

கொற்றமிகுந் தெய்வக் குருநாத சாமிதன்மேற்
சொற்றதமிழ்க் கிள்ளைவிடு தூதுரைக்கக்—கற்றுணர்ந்தோர்
நான்முகத்தோன் போற்றுமுக்க ணக்க னருள்பாலன்
[1]தோன்முகத்தோன் றாளே துணை.

அவையடக்கம்.

கூதலுடையார்நெருப்பின்புகைத்தீமைகுறிக்கிலர்நோய்கொண்டபேர்கள்
வாதபித்தகடும்பிணிக்கோர்மருந்துருசிபார்க்கிலரவ்வாறுபோல
மூதறிவாலுணர்ந்தோர்கள்குருநாதசாமியென்னுமுதல்வன்பேரிற்
காதையினைக்கொள்வரென்புன்கவிக்குறைகண்டாலுநெஞ்சிற்கருதிடாரே.

நூல்.

கலிவெண்பா.

1. சீர்தங்கு தெள்ளமுதுஞ் செந்திருவு மைந்தருவுங்
கூர்தங்கு நாற்கோட்டுக் குஞ்சரமு—மோர்தங்கும்

---

[1]தோல் - யானை.

2\. [1]ஆரத் தனத்தே வரம்பையரும் வந்துதித்த
[2]க்ஷீரக் கடற்றோன் றுங் கிள்ளையே—பாருலகில்

3\. இந்துதவு நன்னுதலார்க் கின்பமுடன் றூதுபோய்
வந்துதவுங் கிஞ்சுகவாய் வன்னியே—[3]நந்துதவு

4\. முத்தே நவமணியே மோகமட வாருயிரின்
றத்தே தவிர்க்கவருந் தத்தையே—[4]கத்தரிகள்

5\. கள்ளையில் வைம்பூங் கணைக்காம வேளேறக்
கிள்ளையாய் வந்தபசுங் கிள்ளையே—தெள்ளுபுனல்

6\. ஆட்டிப்பா ராட்டி யமுதூட்டிச் சீராட்டிக்
கூட்டி லுனையிருத்திக் கோதாட்டி—நாட்டமுடன்

7\. என்போ லிகழ்ச்சிசற்று மில்லாம லென்னிரண்டு
கண்போல் வளர்த்த கடன்றீர—நண்பாகத்

8\. தக்கசந்த மார்பகத்துச் சாமிகுரு நாதன்பான்
மிக்க [5]சந்து போய்மீள வேண்டுங்காண்—புக்கதுயர்

9\. மன்றன் மலரன்ன மருவுகுயில் வண்டு [6]விண்டு
தென்றல்மயில் பூவையுடன் செப்பேன்காண்—முன்றனியே

10\. மாரூருங் கொங்கைமுலை மங்கை மணவாள
னாரூருஞ் செஞ்சடையா னாரூரிற்—றேரூரும்

11\. வீதி தனின்முனிவர் விண்ணோ ரதிசயிப்பப்
பாதிமதி நெற்றிப் பரவைபா—லோதியுணர்

12\. சுந்தரற்காத் தூதுபோய்ச் சொல்லித் திரும்பிவந்தா
னிந்தக் கதைகேட்ட தில்லையோ—முந்தொருநாட்

13\. பாண்டவர்க டங்கள் பகைமுடிக்கப் பாஞ்சாலி
கூண்ட கரிய குழன்முடிக்க—நீண்ட

14\. திருமாலைச் சக்கரக்கைத் தேவைக் குவளை
யருமாலை சூட்டி யனுப்பக்—குருகுலத்துத்

15\. தூண்டு பரித்தேர்ச் சுயோதனன்பாற் றூதாகி
யாண்டுபோய் மீண்டுவந்த தாய்ந்திலையோ—மாண்டகைய

16\. சித்திரப்பொற் பாவைநிகர் சீதை துயர்தீர்க்கப்
[7]பத்திரதன் புத்திரன்றன் பண்டனுப்ப—வத்திரநேர்

---

[1]ஆரம் - முத்து. [2]க்ஷீரம் - பால். [3]நந்து - சங்கு.
[4]கத்து அரிகள் - ஒலிக்கின்றவண்டுகள்.
[5]சந்து - தூது. [6]விண்டு - மேகம்.
[7]பத்திரதன்புத்திரன் - இராமன்.

17. அஞ்சனக்க 1ணஞ்சனைசே யஞ்சாதி 2ரஞ்சமுக
வஞ்சகன்பாற் றூதுபோய் வந்திலனோ—கஞ்சமலர்க்

18. கண்ணு யிரமுடையோன் கற்பிக்கப் பொற்கழற்கா
னண்ணூர் பரவு நளராசன்—பெண்ணுள்

19. அமுதகம யந்திதன்பா லன்று மறுக்காமற்
சுகமுடனே சென்றிலனோ தூது—குமுதவிதழ்

20. மாதருயிர் காக்க வரும்புண் ணியமிதனை
லேத முறமிழிபொன் றில்லையே—யாதலினால்

21. தாதூது வண்டுமுர றூர்வாங்கப் பைங்கிளியே
நீதூது செல்ல நினைந்தருள்வாய்—மீதாரக்

22. கண்ட 3விறும் பூதெனது காதலளித் தோன்றகைநாட்
கொண்ட துயர்விரகங் கூறக்கே—ளண்டர்புகழ்

23. தெல்லிநகர் மாவையூர் சேர்ந்தபழை செங்கமல
வல்லியிருந் தேவாழ்வீ மன்காம—நல்லளிகள்

24. சீத்முறுஞ் சோலைக்காங் கேயன் றுறைதேவர்
காதல் புரிவளமைக் கட்டுவனூர்—சீதமலர்

25. மன்னு மயில்வாழ் மயிலை வயாவிளான்
பன்னுபுக ழுற்ற பலாலியூ—ருன்னரிய

26. புண்ணியமு மிக்க புகழும் படைத்ததனுன்
மண்ணின் மிகுத்த வறுத்தலையூ—ரெண்ணரிய

27. தன்மமுடன் செல்வமிகுந் தையிட்டி யிவ்வூரிற்
சன்ம மெடுத்த சனங்களுக்கும்—பொன்னினுடன்

28. துய்யமுப்பா லாறுவிளை சோறுதவி யாங்கவர்க்கு
வெய்ய பிணிநோய் விலக்கியே—மையமறக்

29. கேட்டவர நல்குங் கிருபைச் சமுத்திரமாங்
4கோட்டமதில் வாழுங் குலதெய்வ—நீட்டுங்

30. 5குளகார் மதகரட குஞ்சரங்கண் மேவும்
அளகா பதிபுரக்கு மண்ணல்—வளமார்

31. விரிச்சிக மாமுனிவன் மெய்த்தவத்தா லீன்றேன்
விரிச்சி கனைநிகர்க்கும் வேந்த—6னரிப்பரிகள்

---

1அஞ்சனைசேய் - அனுமான். 2ஈரஞ்சுமுகன் - இராவணன்.
3இறும்பூது - அதிசயம். 4கோட்டம் - கோயில்.
5குளகு - இலை. 6நரிப்பரிகள் - நரியாகியகுதிரைகள்.

32 கொண்டுவந்த சொக்கனுறை கூடற் றிருப்பதியிற்
பண்டு படிபுரந்த பாண்டியன்றன்—றொண்டுபுரிந
33 தச்சந் நிதியடைந் தங்கயற்க ணம்மைதிருப்
பச்சென்ற மெய்யழகு பார்த்துமன—மிச்சையுற
34. அன்னவடன் கோபாக் கினிப்பொறியொன் றங்கவள்கண்
டன்னி லெழுந்து தழைமாவின்—வன்னிவடுத்
35. தங்கி யிருந்துமுற்றத் தான்பறித்தோர் தாளில்வைக்க
அங்கதுதான் பெண்குழவி யாய்த்தோன்றத்—திங்கள்குல
36. [1]மீனவனுக் கிந்த விதமுரைப்ப நற்கணித
ரானவரை யெல்லா மருகழைத்திட்—டீனமுறும்
37. [2]உற்பாதம் போலிவ் விறும்பூதே தோதுமெனப்
பொற்பாதம் போற்றிப் புகன்றிட்டார்—நற்பாரின்
38. மன்னவனே மீனவனே மாறனே கைதவனே
தென்னவனே பஞ்சவனே செப்பக்கே—ளிந்நகரில்
39. இப்பெண் மகவிருக்க விந்த நகருமுன்றன்
செப்புங்குலமுஞ் சிதையுமென்ன—வப்பொழுதே
40. சோலைமரப் பேழையொன்று சோடித் ததிலிருத்தி
வேலை தனின்மிதப்ப விட்டிடுமக்—காலைதன்னிற்
41. தாவுந் திரைக்கரத்தாற் றங்கிச் சலதியன்னை
பாவுபுகழ்க் காவிரிப்பூம் பட்டினத்தி—லேவிவிட
42. மாநாக னென்னும் வணிகன் மகிழ்ந்தெடுத்து
மானோர் விழியை வளர்த்துமனை—மானகை
43. மண்ணைநிகர் மாசாத்தர் மைந்தற்கு நல்கியபி
னன்னவனோ டன்பா யமருநாட்—கன்னன்மொழி
44. வஞ்சியிடை மாதவிமேன் மாலாகிக் கோவலன்கை
விஞ்சும் பொருடோற்று விட்டதற்பின்—றஞ்சமின்றிக்
45. கண்ணகையார் காலிற் கனகச் சிலம்புவிற்பா
னெண்ணமாய்க் [3]கூடனகர்க் கெய்துதலும்—வண்ணப்
46. பரிபுரத்தைச் சோரமிட்ட [4]பட்டியென்று கொண்டே
உரிய [5]பொன்செய் கொல்ல னுரைப்ப—விரிவுபெறத்

---

1 மீனவன் - பாண்டியன். 2 உற்பாதம் - நன்மை தீமைகளை முன்னறிவிக்குங் குறி. 3 கூடல் - மதுரை. 4 பட்டி - கள்வன். 5 பொன்செய்கொல்லன் - தட்டான்.

47. தேராம னீதி திறம்பி வழுதியருள்
கூராமற் கோவலனைக் கொல்லுவிக்கப்—பார்மீதிற்

48. பொற்புமிகுஞ் 1சாலிமுதற் பூவையரெல் லார்புகழுங்
கற்புமிகு மன்னையெங்கள் கண்ணகிதா—னற்பொருவும்

49. ஒற்றைமணி நூபுரத்தை யொண்கரத்தி லேந்தியிருட்
கற்றைக் குழல்விரித்துக் கண்சிவந்து—கொற்றமிகு

50. முன்னவனை முன்னாண் முகிலை விலங்கிட்ட
மன்னவனை முன்னம் வழக்கில்வென்று—பின்னர்த்

51 திரிபுரத்தைச் சுட்ட சிவன்போற் சினந்து
பரிபுரத்தை விட்டெறியப் பாரி—னெரிபரந்திட்

52. டந்த மதுரைநக ரப்பாண்டி யன்முதலோர்
வெந்துவெந்து நீறாகி 2வீந்திட்டார்—சிந்தைமிகக்

53. கன்றா மவள்கோபக் கடுங்கனலின் வெந்துநோ
யென்றுலகோர் மேற்சென் றிடர்செய்ய—வன்றிறந்த

51 றேச மதிலுயிர்கள் சேரச் சிதைவதுகண்
டீச னுமை யுள்ளந் திரங்கியே—நேசமுடன்

55. பொன்னின் முடியும் புனைந்து [illegible]நாத
னென்னுந் திருப்பெயரு மிட்டனுப்ப—முன்னந்

56. திரம்பெற் றிடுங்குருநோய்த் தீதவிதது மாற்ற
வரம்பெற்று வந்த வரத—னுரம்பெற்ற

57. 3நந்திப்பூ மாலை நரபதியும் பாண்டவரும்
பந்திப் படைபொருத பாரதத்தை—முந்தியே [டாற்

58. சேற்றிருக்குஞ் செங்கமலச் செங்கையிற்றன் வெண்கோட்
பாற்றிருக்குஞ் 4செம்பொன்வரைப் பால்வரைந்தோன்—வீற்

59. அண்டர் முதன்முனிவ ரம்புவியோ ரன்புடனே [றிருக்கும்
கண்டவர்கள போற்றுங் கசாத்துறையுந்—துண்டமதி

60. சூடும் பெருமான் சுடர்நுதற்கட் டோன்றிநட
மாடுமயி லேறியயி லேவி—நீடுதிறற்

61. றானவரைக் கொன்றழுக்கித் தஞ்சமென வந்தடைந்த
வானவரைக் காத்த வயவீரன்—றேனமருங்

---

1சாலி - அருந்ததி. 2வீதல் - அழிதல்.
3நந்திப்பூமாலைநரபதி - துரியோதனன்.
4செம்பொன்வரைப்பால்வரைந்தோன் - விநாயகர்.

62. கோதைக் கடம்பன் குறிஞ்சி வனநாதன்
போதைய பறித்தோங்கும் பொற்பதத்தான்—சீதை

63. மருகன் குறவர் மகள்காந்தன் சேந்தன்
முருக னமரர் முதல்வன்—பெருகன்பர்

64. வாயிற் றுதிக்க வரமுதவி வாழ்ந்திருக்குங்
1கோயிற் கடவைக் குலப்பதியுந்—தீயிற்

65. சிவந்த விழித்தவளச் சிந்தூரத்தின் மஞ்சி
னிவர்ந்தருளு மாசாத்த னென்று—முவந்து

66. பொருளினுதற் புட்கலையும் பூரணையுங் கூட
விருவருட னன்புற் றிருக்குந—திருமருவுஞ்

67. சீரார் வளமைத் திகழ்பழையா மந்நகரி
லூர்காவி லென்னு முயர்பதியும்—பார்மீதில்

68. எறுபுகழ் வானளவு மெட்டிமுட்டுங் கட்டுவெளிற்
கூறு கரண்டாக் குளப்பதியுஞ்—சீறுசின

69. மாறிக கருணை மழைவழங்க மானிடர்நோ
யாறிப் பிழைக்க வருள்புரிந்து—கூறரிய

70. மாதரைகள் போற்றுலக மாதா மகிழ்ந்துறையுந்
தோதரையாம் பூஞ்சோலை சூழ்பதியுங்—காதரைமேல்

71. ஆசில்மணம் வீசுமல ராவிபயி லும்மயிலை
மாசில்பிடா ரத்தனையாம் வண்பதியும்—வீசுமணம்

72. உற்ற மலர்ச்சோலை யோங்கும் பலாலிதன்னிற்
குற்றமற்ற கன்னூர்க் குளப்பதியுஞ்—சொற்றமுழவும்

73. பூகநெடுஞ் சோலைகளும் பொய்கைகளுஞ் சூழ்ந்தபொன்னி
னாகநிகர் முலவை நற்பதியும்—மேவகந்

74 தரும்புண் டரிகநிகர் சங்கைப்பலங்க
ளிரும்புண்ட நீர்பிளிந்த வேந்தல்—விரும்புமாங்

75. காயைப் பறித்துக் கனிபழமாக் காண்பித்தோன்
றாயிற் சிறந்த தயவாளன்—மேயபுகழ்ச்

76. சீராளன் வண்மைத் திறலாளன் றேசமெச்சும்
பேராளன் மிக்க பெரியதெய்வ—மூராளுங்

77. கோவை நிகரானோர் குடியிருக்கு நற்பதியாம்
மாவை நகரில் வளவுடையுந்—தாவிவளர்

---

1கோயிற்கடவை - மாவிட்டபுரேசர் எழுந்தருளிய இடத்தின் பெயர்

78. சோம்பலில ராய்த்துன்பந் தூர்க்குங் குமரர்கள்வாழ்
மாம்பிரா யென்னும் வளப்பதியுங்—1காம்புறமோட்
79. கன்னிமா ரோரெழுவர் கற்புமிக்கோ ராகிநின்ற
கொன்னுலவு நாச்சிமார் கோவிலுடன்—றென்னுலவு
80. 2சென்னியர்கள் சேரலர்க டென்னவர்கள் கொண்டாட
வன்னியநா யன்மார் வதிந்திருக்கு—நன்னிலமார்
81. ஏற்றமிகுஞ் 3சாலிவளர்ந் தெங்கும் நிழல்காட்டித்
தேற்றமிகும் யாலைத் திருப்பதியுந்—தோற்றமிகுங்
82. காவி மலர்க்கருணைக் கண்காட்டிக் காளிகா
தேவியுறை மாவைத் திருப்பதியுந்—தாவுதிரை
83. மேலுதிக்கும் வெண்மதியை விண்மீன்கள் சூழ்ந்ததென்ன
நாலுதிக்குஞ் சூழ நடுவாகச்—சாலும்
84. அறங்கண் ணியபெரியோ ராதரித்துப் போற்ற
விறங்கண் ணியவளையி லென்றும்—பிறங்கணியாய்
85. உற்றுறையு நாத னுலகந் தொழுநாதன்
கொற்றமிகு நாதன் குருநாதன்—சொற்ற
86. தருநாடு காக்குந் தலைவனெனப் பாரின்
வருநாடு காத்து வருநா—ளொருநாளிற்
87. பூசாரி யார்கள் புனிதப் புனலாட்டி
யாசாரஞ் சேர்த்துமெய்யி லங்கியிட்டுத்—தேசாரும்
88. உத்தரிய மிட்டுமண மோங்குபன்னீர் விட்டளவிக்
கொத்தவிழ்பூஞ் சந்தின் குழம்பணிந்து—வித்தகமாம்
89. 4பானு நிகர்மதிப்பொற் பட்டம் புனைந்துமதி
போனுதலிற் கத்தூரிப் பொட்டுமிட்டுக்—கூனுலவு
90. கம்பிக் கடுக்கன் கனகமணிக் குண்டலங்க
டும்பிப் பதக்கஞ் சுடர்மௌலி—பைம்பொன்னின்
91. கட்டாரும் பொன்னரைஞாண் காலில்வீ ரக்கழல்கள்
விட்டோங்கு வாகுபுரி மேல்வளைக—ளிட்டாங்குத்
92. தாதுலவு முல்லை 5சலசம் 6கரவீர
மேதமறும் பிச்சி யிருவாட்சி—சீதமலர்
93. வாசங் கமழு மகிண்மல் லிகைகுவளை
தேசம் புகழவருஞ் செங்குமுத—மாசகலுஞ்

1காம்பு - மூங்கில். 2சென்னியர் - சோழர். 3சாலி - நெல்.
4பானு - சூரியன். 5சலசம் - தாமரை. 6கரவீரம் - அலரி.

4. சண்பகமந் தாரந் 1தமாலம் 2வலம்புரிமாப்
பண்பயில்பூ மாலை பலசூட்டிப்—பண்பயிலுந்
5. தண்ணார் முழுமதிப்பொற் றங்கத்தி னலிழைத்த
கண்ணாடி நோக்கிக் களிகூர்ந்து—விண்ணோருங்
6. கோபுர வாயில் குறுகுமள விற்பாகர்
தீவிரமாய்ப் பந்திதனிற் சேர்ந்துநிற்கு—மாபுரமார்
7. 3கற்கிகளின் மேலாகிக் கைவிரலெண் பத்திரண்டி
லொற்கமின்றி மேலுயர முள்ளதாய்—பொற்புமிகு
8. நாலு பதக்குளம்பும் நல்ல செழும்பவளம்
போலு நிறங்கள் பொலிவுளதாய்க்—கோலமுறு
9. கோசங் குரஞ்சிவந்து கோதில்கொடி மல்லிகையின்
வாசமுகை போற்பல் வயங்குவதா—யாசில்
100. உடலின் வலஞ்சுழியென் றென்பதுடன் வாழை
மடலின் செவிகள் வயங்கக்—கடலின்பாற்
101. சங்கின் றொனிபோற் றயங்குங் குரலுடைத்தாய்
மங்கலில்பொற் கம்பிகிர் வாலுளதாய்—வெங்கட்
102. கடைநா மிகச்சிவந்து காமர் நுதலிற்
குடைமேற் குடைகள் குலவப்—பிடர்மீதின்
103. மேவு முளைக்கரும்பின் மென்பூ வெனவிளங்கப்
பூவுலகு தன்னிற் புனன்மீதிற்—றாவிமனை
104. வேக முடன்வாயு வேகமென வேவிரைவிற்
போகவல்ல பச்சைப் புரவிதன்னைக்—4கோகனக
105. ஓடைதனி னீராட்டி யோங்கு 5குரப்பமிட்டு
ஆடையா லீர மறுத்துவண்மை—ஆடையிற்செய்
106. 6வாய்க்கருவி பூட்டி மணிப்பொற் கலன்பூட்டி
நீக்குடைய வங்கவடி நேர்தூக்கித்—தாக்குடைய
107. காலி னணிகள் கலவென் றொலிப்பணிட்டுச்
சாலு முகபடமுந் தானணிந்திட்—டோலமிடு
108 நற்சதங்கை மாலை நவில்வெண் டயமாலை
யற்புடனே கண்டத் தணிந்ததற்பின்—சொற்படியே
109. சென்று திதிதகுத தித்தகுத தித்தகுத
என்று நடன மிடுவித்து—வென்றிக்

1தமாலம் - பச்சிலை. 2வலம்புரி - நந்தியாவர்த்தம். 3கற்கி - குதிரை.
4கோகனகம் - தாமரை. 5குரப்பம் - குதிரையிர்சீவுஞ் சீப்பு.
6வாய்க்கருவி - கடிவாளம் என்பர்.

110. குருநாதர் முன்னர்க் கொணர வதிலேறித்
திருவாச றன்னிற் றிரும்பி—வருநாம

111. மல்லகதி மிக்க மயூரகதி வானரத்தி
னல்ல கதிசரத்தி றுட்டுகதி —சொல்லுஞ்

112. சயகதியென் றைந்துவிதந் தங்கும் நடைக
ணயமுறவே நன்கு நடத்தப்—புயலின்

113. முழங்குதவில் தம்பட்ட மும்முரசு தாளந்
தழங்குற்ற பம்பை தடாரி—வழங்கனைய

114. தொண்டக மொந்தை துடியா குதிதபலை
யண்ட முகட்டளவு மாங்கதிரக்—கொண்டவெற்றிச்

115. சங்[1]கிரலை பேரிகைநற் றாரையுட னுகசுரந்
துங்கமுறத் தாவுந் தொனியோங்க—[2]விங்கிதமாஞ்

116. சொன்னருத்ர வீணை சுருதிக் குரால்மணியாழ்
வன்னமணிக் கின்னரங்கள் வாசிப்ப—மின்னுமணிப்

117. பச்சைக் குடைசெம் பவளக் குடையுலகோர்
மெச்சவரும் வெண்குடைகண் மேனிமூற்றக்—கச்சணியுங்

118 கொங்கைக் குவடசையக் கோலமலர்க் கரத்தான்
மங்கையர்கள் வெண்சா மரமிரட்டப்—பொங்குதிரை

119. ஞாலவட்ட மேந்துரகர் நற்[3]பணம்போ னுதிக்கு
மாலவட்டம் வீசி யசைந்துவரச்—சீலமுற்ற

120. வெற்றிக் கொடியுடனே வெண்கொடியுஞ் செங்கொடியுஞ்
சுற்றி யிருமருங்குஞ் சூழ்ந்துவரக்—கொற்றமிகும்

121. வில்லியரும் வாட்படைகொள் வீரியருங் கூரியநற்
சல்லி சவழந் தகைத்தோருஞ்—சொல்லிருபத்

122. தோரா யிரத்தொடொன்றை யொன்றிச்சேர் சேவகருந்
தேர்மீதி லேறிவருஞ் சேனைகளும்—பார்மீதில்

123. வாசிப் படையும் மதமால் கரிப்படையுந்
தூசிப் படையாய்முன் சூழ்ந்துவர—மாசில்லாப்

124. பஞ்சவர்ணக் கோடிகத்திற் பாவாடை போட்டுவரக்
குஞ்சங்கா ளாஞ்சிசிலர் கொண்டுவர—வஞ்சியர்கள்

125. சூடகக்கை காட்டிமிக்க சுத்தாங்கத் தேசிகமாய்
நாடகங்கண் முன்னே நடித்துவரக்—கூடனேய்

---

1இரலை - கொம்புவாத்தியம். 2இங்கிதம் - இனிமை.
3பணம் - பாம்பின்படம்.

126. மாற்றுங் குருநாதன் வந்தான்வந் தானெனவே
சாற்று மொழிகளெங்குந் தாவிவர—வேற்றமிகும்

127. 1வல்லயங்கை யீட்டி வரிவாட் படைபரிசை
கல்லைத் தகர்க்குங் கதைதாங்கி—யொல்லைதனில்

128. உள்விழுந்து வீசி யுபாயமெடுத் தொட்டி வெட்டி
மெல்லவிழுந் தார்ப்பரித்து மெய்யடக்கித்—துள்ளியே

129. கப்பணம் வீசிக் கனன்றுகட கம்வீசித்
தப்பாக் குறுக்குமுறி தான்வீசி—யப்பால்

130. உரமாய்த் துருவமெடுத் தொட்டித் தகர்த்துச்
சிரமத் தொழில்கள் சிலர்செய்யத்—தரமிக்க

131. நீண்ட விறிசு நிலப்பூ விறிசுடனே
காண்டகைய வெம்மைக் கடல்விறிசு—தாண்டியெழும்

132. ஆகாயஞ் சக்கரந்தோட் டாகாய வாணமிக
வாகான வெண்சா மரம்விசுக்கு—மீகானுங்

133. கக்கரிப்பூத் தாமரைப்பூக் காயாம்பூக் கொத்தலரி
பக்கமெல்லா மோடும் படைவாண—முக்கிரமாம்

134. பூசக்ர சாமரமாம் பூமிக்கு முன்னுகைத்
தேசமெச்சு வாணவித்தை செய்துவர—நேசமுடன்

135. அந்தமுறும் பைங்கிளியே யங்கவரைச் சேவித்து
வந்த மனுவின் வகையினைக்கேண்—முந்திவரும்

136. ஆதி வருண ரறுதொழிலார் முன்னூலார்
வேதநெறி யொழுகும் விப்பிரரும்—நீதி

137. நடத்திப் புவிகாத்து நண்ணார் குறும்பை
யடக்கு மரச ரவரு—மிடர்ப்படுத்தா

138. 2வங்கஞ் செலுத்திமிகு வர்த்தகங்கள் செய்யவல்ல
சிங்கக் கொடியுடைய செட்டிகளுந்—துங்கமுறுங்

139. கன்னீடு பொற்புயத்துக் காவலர்தம் பேரவையின்
முன்னீடு பெற்ற முதன்மையோர்—சொன்னீடுஞ்

140. சீராளர் முன்னிருந்த செல்வமிகுந் தெல்லிநக
ரோராள ராஞோர்க ளெல்லோருங்—கார்மேவும்

141. பொங்க மிகுசோலை புடைசூழு மாவைநகர்
தங்கிவளர் வேளாண் டலைவர்களும்—பங்கயமேற்

1வல்லயம் - எறியீட்டி. 2வங்கம் - தோணி.

142. பண்[1]ணளிகள் பாடிப் பழனஞ் செறிபழையூர
தண்ணளிசேர் வன்மைச் [2]சதுர்த்தர்களும்—பெண்ணமுதை

143. [3]வாமத்தின் வைத்தோனை வந்திப் பவர்வீமன்
காமத்தின் வாழ்மன் களமர்களு—[4]மேமக்

144. கரிகுரி யாம்புகழ்க் காங்கேயன் றுறையில்
வரிசைபெறு கின்ற மனுவும்—புரிகடன்னிற்

145. [5]குட்டுவனூர் சோழனூர் கோப்பாண்டி யூர்மேன்மைக்
கட்டுவனூர் வாழுங் களமர்களும்—பட்டுவர்சைச்

146. சேலை யரிந்து சிலந்திப் பருத்திறந்து
காலைமுடி மன்னவர்க்குக் காட்டினேன்—வேலைதன்னிற்

147. பண்களணி பாடிப் பயிலு மயிலைநகர்
மண்களமர் தங்குலத்து வன்னியரும்—விண்புகழக்

148. கொற்றவர்கொண் டாடக் குலவு வயாவிளான்
உற்ற வுழவர்குலத் துள்ளோருஞ்—சுற்றிமிகப்

149. பாராட்டு வன்மைப் பலாசெயில்லை ளாளரென்று
பேர்நாட்டு கின்ற பெரியோருஞ்—சீர்நாட்டு

150. மண்புகழ வந்த வறுத்தலையூ ரிற்றகைமைப்
பண்புபெறு நற்பூமி பாலர்களுந்—தண்குவளைத்

151. தாரார் தருப்போற் றருவார்நற் றையிட்டி
யூரார்கா ராளர்குலத் துற்றோரும்—நீர்நாட்டு

152. வெற்றி விடைக்கொடியார் மேலா ரியர்குலத்தி
னுற்ற மடப்பளியி லுள்ளோரும்—[6]பற்றலரை

153. வென்றவிறல் வாகைபுனை வீரமலை யாள
ரென்று வருங்குலத்தோ ரெல்லோருந்—துன்றுமன்னர்

154. வாகுமுடி மேல்வெண் மதிக்கவிகை தான்பிடிப்போ
ராகு மகம்படியா ராளுரு—மேகனருள்

155. பெற்றதிரு நீலகண்ட நாயகனார் பேர்மரபி
னுற்ற வுழவர்குலத் துள்ளவருஞ்—சுற்றுகடன்

156. மண்டலங்கள் போற்ற வருந்தவள வாரணர்தார்க்
கண்டலந்தார் மார்பர்கரை யூரவரும்—விண்டுநருச்

---

1அளிகள் - வண்டுகள். 2சதுர்த்தர் - சூத்திரர். 3வாமம் - இடப்பக்கம்.
4ஏமக்கரிகுரி - களிபொருந்திய யானைபோல் வீரம்.
5குட்டுவன் - சேரன். 6பற்றலர் - பகைவர்.

157. சிந்துதொடை மன்னவர்க்குச் செய்தமுடி பாவலர்க்குத்
தந்து புகழ்படைத்த தட்டாரும்—மந்தெனவே

158 வெட்டி முறித்திரும்பை வேருக்கி முட்டியலாற்
கொட்டிப் பணிசெய்யுங் கொல்லர்களுந்—தொட்டிமையாய்

159. வானக் கதிரவன்போல் வட்டப் படக்கடையுந்
தானத் தபதிகுலத் தச்சர்களும்—மேன்மை

160. குலவுதும்பை மாலை குதிரைகுடை பெற்றோன்
வலவைப் பதிப்பேருர் வண்ணாரும்—நிலவலயம்

161. ஆளு மரசர்முத லானவர்க்குச் சத்திரத்தா
ளுளு மயிர்வினைசெய் நாவிதருங்—கோளி

162. நிருவள ளுவர்முன் நிருநாளைப் போவார்
வருமரபில் வந்த மனுவுந்—தருவினுயர்

163. நீரமலர்ப் பொற்பூ விரசப்பூத் தானிறைத்துச்
சேர விருமருங்குஞ் சேவிப்ப—வீரமிகும்

164. வெய்ய குருநாதன் விளங்குபச்சைக் 1கோடரத்திற்
றுய்ய தெருவீதி தோன்றுதலுஞ்—செய்யமலர்த்

165. தோரணங்கள் நாட்டுவார் தூய்யதென்னம் பாளைவைத்து
பூரணகும் பங்கள்பல பூரிப்பா—ரேரினங்கொ

166. டாழைக் கனியுடனே தண்மலர்கண் ணுட்டிடுவார்
வாழைகன்னல் நாட்டி வடிவிடுவார்—காளமுதற்

167. பூவணைப் பந்தர்சிலர் போடுவார் பன்னீரா
2லாவணத்தின் பூதி யடக்குவா—ரூவணத்தின்

168. வீதி யலங்கரிக்கும் வேளை சுரர்மாதர்
கோதில் புயங்கா குலமாத—நீதின்

169. மணிகடிகழ் குன்றின் மருவு மடமாத
ரணிநீ ரரமகளி ராளோர்—கணியாகல்

170. லேருலவு விஞ்சையர்க ளின்பமட வார்முதலாய்ப்
பாருலகி லேழ்பருவப் பாவையரும்—தார்சொருகிக்

171. கோதில் குழன்முடித்துக் 3கோசிகங்க டானுடுத்துத்
தீதில் நுதலிற் றிலதமிட்டுக்—காதிலணி

1கோடரம் - குதிரை. 2ஆவணத்தின்பூதி - தெருப்புழுதி.
3கோசிகம் - வஸ்திரம்.

172. கைக்கட்டுக் கைக்கடகங் காலாளி[illegible]டுத்
தக்கதண்டை பாடகமுந் தானணிந்திட்—டொக்கவே

173. கையின் மணிபெற்ற கழங்[1]கம் மனையேந்தி
மையமிக வாங்கண் மறுகில்வந்து—பெய்முகிற்கீன்

174. வட்டமதி போலும் வாலமதி போனுதலிற்
பட்ட மணிந்தபடி பாரீர்—விட்டொளிகள்

175. கால வசைந்தசைந்து காதிரண்டிற் செங்கனகக்
கோல மணிக்குண் டலம்பாரீர்—மால்வரையின்

176. மைத்த விருட்பகைஞன் வந்துதித்த கோலமன்ன
முத்த மணிப்பொன் முடிபாரீர்—நித்தமுமே

177. தஞ்சமென வந்தடைந்தோர் தங்கட் கருள்சுரக்குங்
கஞ்ச மலரனைய கண்பாரீர்—[2]மஞ்சுபயில்

178. சோலை மலையருவி தூங்குவபோன் வெண்டரள
மாலை வயங்கும் வகைபாரீர்—சாலவளர்

179. குன்றென்று நின்பொற் குடமென்றுங் கூறரிய
பொன்றங் கிருதிண் புயம்பாரீ—ரென்றென்றுங்

180 கூவித் திரியுங் குயிலினம்போற் கோகனக
வாவிப் பெடையனம்போல் வந்துவந்து—சேவிக்கு

181. மங்கையரோ டெய்தி மதியில் சிறியேனுஞ்
செங்கை குவித்துநின்று சேவித்தே—னாங்கவரைக்

182. கண்டகந்தா னுழ்க்குருகிக் [3]கங்குறனிற் கண்ணடைந்த
[4]முண்டகம்போல் வாடிமுக மோசமுற்று—மண்டலத்தில்

183. வெங்குருகோய் கொண்டவர்தம் வெம்மைதரும் வெப்பவித்திட்
டங்குயிரைக் காத்தருளு மாண்மைபோற்—பொங்கியெழு

184. தூமக் கனலிற் சுருளச் சுடுமெனது
காமக் கனறணித்துக் காத்தருளென்—றேமுற்று

185. நன்முறுவன் மாதர் நடுநிற்கும் வேளைதனிற்
புன்முறுவல் காட்டியவர் போயினா—ரென்முனையில்

186. ஆவலுடன் பேராசை யான கடலிழந்தே
தூவல்மட்டு மாழமலர் தோணிவிட்டா—னேவிவிடும்

---

1அம்மனை - அம்மனைக்காய். 2மஞ்சு - முகில். 3கங்குல் - இரவு.
4முண்டகம் - தாமரை.

187. வாளிபடச் சோர்ந்துவிடு மாமயில்போ லேமடவார்
தோளின் மிசைச்சார்ந்து தூங்கினேன்—கோளின்மிகு
188. சன்னியோ பேய்க்குறையோ தானேதோ வென்றுசில
கன்னியர்க ளெல்லாங் கவலையுற்றுப்—பொன்னியுந்
189. தண்டநேர் கைத்தலத்திற் றூங்கி யெடுத்துமெல்லக்
கொண்டவடி மண்டபத்திற் கொண்டுசென்று—பண்டுபகை
190. மாரன் றொடுக்கு மலர்வாளி யிற்கிடத்தி
1யாரக் குழம்பரைத்திட் டப்பியப்பிச்—சாரமுற்றும்
191. பூசு மதவேள் பொரும்போரி லேறுதென்றல்
வீசிவர வாசன் வெளிதிறந்தா—ராசைநோய்
192. மாற்ற மருந்தறியா மாதவர்கள் செய்பிழையாற்
றேற்றமொன்று மின்றிமனஞ் சோம்பினேன்—றேற்றமிகும்
193. அன்றில்பகை தாயருட னுயர்நிழல் பகைநற்
றென்றல்பகை தெண்டிரைசேர் சிந்துபகை—மன்றன்மலர்
194. 2அம்பைந் துடைய வநங்கன் பகைமாவின்
கொம்பிற் பயிலுங் குயில்கள்பகை—நம்பினேன்
195. உன்னைப் பசுங்கிளியே யோருதவி வேறறியே
னென்னைப் புரந்தேசற் கெண்ணுவாய்—சென்னெறியிற்
196 கண்டலைந்து தாமதித்துக் காய்கனிக டான்மிகுத்த
தண்டலைக ளுண்டவற்றிற் றங்காதே—விண்டெனவே
197. விம்மினகொங் கைத்துணையார் மென்குதலைச் சொற்கேட்டு
நம்மினமென் றங்கு நணுகாதே—செம்மையினுந்
198. தேசமெங்குங் காராளர் சேருந் தெருக்கடன்னில்
வாச மனைதோறும் வருவிருந்தைப் போசனங்கள்
199. பண்ணியிளைப் பாறுமென்பர் பாவையர்சொற் குப்பயந்து
எண்ணித் திரும்பிவர வெண்ணாதே—புண்ணியர்கள்
200. பூசையுண வாருமென்பர் பூசையென்று நீபயந்து
பாசக் கிளியே பதுங்காதே—யாசையுள்ளோர்
201. நன்னாக மென்பரந்த நாட்டையது நாகமென்று
நின்னாகந் தன்னி னினையாதே—பொன்னாரும்
202. வண்டா மரைமலரும் வாவிகளுஞ் சோலைகளுங்
கண்டாங் கதனைக் கடந்தேகித்—தண்டாமற்

---

1ஆரக்குழம்பு - சந்தனக்குழம்பு. 2அம்பு ஐந்து உடைய எனப்பிரிக்க.

203 சங்கைபெறு காராளர் தங்குலோர் தாமலரினை
மங்கைபயில் மாவை வழந்தாள்—கங்குல்

204. உறங்கணிய வளையார்ந் தோங்குபொய் கைசூழு
மிறங்கணிய வளையி லெய்தித்—திறம்பெறவே

205. முன்னைதிமேல நின்று முதல்வன் குருநாதனை
சந்நிதி வாசறனி லணுகி—யன்னவர்தானை

206. மஞ்சன மாடி மணிப்பொற் கலன்பூட்டி
யஞ்சுவிதப் போசனங்க ளார்ந்தருளிக்—கஞ்சனநேர்

207. நோக்கிக் களிகூர்ந்து நண்ணிடையா ராட்கொண்டு
வாக்கின மனத்தின் மகிழ்ச்சியுண்டாய்—நீக்கமின்றி

208. நாற்றிசையி லுள்ள நரருக் கருள்புரிந்து
வீற்றிருக்குஞ் சந்தோஷ வேளைகண்டு—போற்றிசெய்து

209 தீர்வாழி யீங்குன் றிருப்பதியும் வாழியுன்றன்
பேர்வாழி யென்று பெரிதேத்திச—சீர்வாழு

210. நின்பவனி கண்டொருபெ ணின்னை நினைந்துநெஞ்சி
லன்பவன லிட்டமெழு காயினள்—ளின்பமலர்

211. மஞ்சரிகள் சூடாள் வரிவிழிக்கு மைதீட்டாள்
விஞ்சுமணிப் பொற்பூண் விதம்பூணாள்—வஞ்சியரோ

212. டம்மனைபந் தாடா ளன்ன மிவைதொடாள்
தம்மனைமார் தங்களொடு தார்கட்டாள்—செம்மனையிற்

213. கண்டுயிலா ளென்றெனது காதலெல்லாங் காதிலுற
விண்டுவிண்டு நன்றாய் விரித்தெடுத்துப்—பண்டிங்

214. கிறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாஞ் சூதென்—றறிவிற்

215. றிருவள் ளுவருரைத்த செய்யுட் பயனைப்
பெருகநினைந் தச்சமறப் பேசி—முருகுமலர்ச்

216. சோலைப் பசுங்கிளியே சொல்லுங் குருநாதர்
மாலைதனை நீவாங்கி வா.

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உபந்நியாசம் | க | விதந்து | வியந்து |
| சிறப்புப்பாயிரம் | கச | ருவளா | திருவளா |
| அ | உஎ | கலவென் | கலகலவென் |

தருமபுர ஆதீன இலவச வெளியீடு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

தருமபுர ஆதீனத்து ௮-வது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ அழகியதிருச்சிற்றம்பலதேசிக ஞானசம்பந்த சுவாமிகள்மீது

சொர்க்கபுர மடாலய ஸ்தாபனாசாரியர்

**அழகியதிருச்சிற்றம்பலசுவாமிகள்**

திருவாய்மலர்ந்தருளிய

# கிளிவிடுதூது



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுரஆதீனத்து

௨௪-வது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ

சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள்

ஆக்ஞைப்படி

தருமபுர ஆதீன வித்வசிகாமணி

திருவாளர் ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளையவர்களால்

பரிசோதிக்கப்பெற்று

ஒடுக்கம் சிவகுருநாதத்தம்பிரான் சுவாமிகளால்

சீகாழி

குமரன் பிரசில்

பதிப்பிக்கப்பெற்றது.



சிவமயம்.

# கிளி விடு தூது.

## முன்னுரை!

உய்வளர் மிகுத்த தருமையா தீனத்
தோங்குமேட் டாவது பட்டத்
தெய்வநற் குரவன் மாண்பினைச் சொலுமித்
திருத்தகு நூலிவண் யார்க்கும்
கைவரும் வகையி லச்சினி லேறக்
கருணைசெய் துவர்தரு ளிமைக்கண்
சைவமுந் தமிழுந் தழைக்கவந் தமரும்
சண்முக ஞானதே சிகரே.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து ௨௬-வது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் திருவுளம் மகிழும்வண்ணம், கிளிவிடுதூது என்னும் இந்நூல் காழி வித்வசிகாமணியும் இவ்வாதீன வித்வானும் ஆகிய திருவாளர் முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்களால் பரிசோதிக்கப் பெற்றது. மெய்கண்டசந்தானத்து உமாபதி தேவநாயனார் தமது ஞானாசாரியர் மீது நெஞ்சுவிடுதூது என்னும் நூலை இயற்றியருளியது போல, இவ்வாதீனத்துப் பரமசிட்டரும், சொக்கபுரமடாலயத்தைத் தாபித்தவரும் ஆகிய அழகிய திருச்சிற்றம்பலதேசிகர் என்பார் தமது ஞானாசாரியரும் தருமபுர ஆதீனத்து எட்டாவது மகா சந்நிதானமும் ஆகிய அழகிய திருச்சிற்றம்பலதேசிக ஞானசம்பந்த சுவாமிகளின் மீது இந்நூலைப்பாடி அருளிச்செய்தார். திருத்தேவாரம் முதலிய தெய்வமறைகளில் இங்ஙனம் கிளி முதலியவற்றைத் தலைவியர் தூதாக அனுப்பிவருதல் காணக்கூடும். தருமபுர ஆதீனத்தின்கண் குரு மூர்த்திகளாக எழுந்தருளிவரும் மகானுபவர்கள் யாவரும் ஸ்ரீ கைலாச பதியாகிய ஸ்ரீகண்டபரமேசுவரரது அனுக்கிரகத்திருக்கோலங்கொண்ட குருஞானசம்பந்த மூர்த்திகள் என்பதும், அன்னார் தமது சந்நிதிக்கண் அதிதீவிர பக்குவம் அடைந்த உத்தமமானவர்களுக்கு உண்மை ஞானானுபவத்தை ஆராய்ச்சி ஞானத்தாலும், அநுபவ ஞானத்தாலும்

விந்துப் பாசநீக்கத்தையும், சிவத்துவ விளக்கத்தையும் இன்னின்ன
மயில் பரிபாலித்து வருகின்றார்கள் என்பதும், இந்தக் கிரமத்தால்
கண்ட பரம்பரையைச் சேர்ந்த இத்தருமபுர ஆதீனம் சத்திய
ர பீடமாய் இலங்குவது என்பதும், இவ்வாதீனத்து சு-வது மகா
ஞானமாகிய மாசிலாமணி ஞானசம்பந்த சுவாமிகள் மீது குமரகுரு
வாமிகள் இயற்றியருளிய பண்டார மும்மணிக்கோவையிற் போல,
வாதீனத்துத் தமது குருமூர்த்திகள் மீது இந்நூலாசிரியர்
பருளிய இக்கிளிவிடுதூது இவ்வாதீனத்து ஞானாசாரிய சுவாமிகள்
வரும் நான்குவகைச் சத்திநிபாதத்தையும் அடைந்த உத்தமர்
க்குச் சரியையாதி சிவதருமங்களையும் சிவஞானத்தையும் பரிபாலி
அருள்செய்வதுமன்றிச் செந்தமிழ் வளர்ச்சியையும் அதன் மூலம்
பொருள் உண்மைச் சிவானுபவத்தையும் பிரசாதித்து வருகின்
ன் என்பதும் இந்நூலால் தெள்ளிதிற் புலப்படும்.

ஒரு நாட்டின் உன்னத நிலையை அறிவதற்குக் கருவியாயிருப்பன
நாட்டின் கலைகளே. கலைகளே ஒரு நாட்டின் உயிராயிருப்பன.
ு நாட்டின் உயிராய் நின்று அதனைப் போற்றிவரும் கலைகளாகிய
இலக்கியங்களோ பலப்பல. எண்ணிறந்தனவாகிய இலக்கியங்களை நம்
னோரிற் சிலர் தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தமெனத் தொகைப்
தினர். இவற்றுள் தூது என்பதும் ஒன்று. இது பொருட்டொடர்
செய்யுளாகிய விருந்தின்பாற்படும். தூதாவது காமம்மிக்க காதலி
ந்தி காதலன் மாட்டு உயர்திணைப் பொருளையேனும் அஃறிணைப்
ருளையேனும் தூதாகஅனுப்பித் தன் குறையை முடித்துவரச்
ல்லுவது. இது பாட்டுடைத் தலைவன் பெருமையையும் தூதிற்குரிய
நுளின் தன்மையையும் விவரித்து உவமை உருவகம் முதலிய
ிகளை அமைத்துக் கலிவெண்பாவினால் கற்றுவல்ல புலவரால்
ப்படுவதாகும். தூதிற்குரிய பொருள்களில் கிளியுமொன்றென்பது

இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை
பயம்பெறுமே கம்பூவை பாங்கி — நயந்தகுயில்
பேதைநெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே
தூதுரைத்து வாங்குந் தொடை.

என்றும் இரத்தினச் சுருக்கச் செய்யுளான் அறியலாம்.

இவைகளையன்றி வேறு சிலவற்றையும் நூலாசிரியர் எடுத்துக்காட்டாகப்பாடிய பாடல்களும் உள்ளன. அவை தமிழ்விடுதூது, மேகவிடுதூது, நாரைவிடுதூது, நெல்விடுதூது, குயில்விடுதூது, பணவிடுதூது முதலியன மற்றும் அந்நூலில் இருள்வாசி குவளை சண்பகம் பாரிசாதம் பிச்சி முதலிய பூக்களையும், நாகணவாய்ப்புள் புறவு போன்ற முதலியவற்றையும் தூதிற்குரிய பொருளாக வைத்துப் புலவர் பாடியுள்ளார். கிளி முதலிய அஃறிணைப் பொருள்கள் சொல்வதற்கும் கேட்பதற்கும் உரியன அல்லவேனும் உரியனபோல் வைத்துச்சொல்வது இலக்கிய மரபாகும். இதனைக் "கேட்குநபோலவும் கிளக்குநபோலவும் அஃறிணை மருங்கினும் அறையப்படுமே" என்பதும் வலியுறுத்தும். இது பிறவற்றை குறித்து வருந்தும் தலைவியின் வருத்தத்தைத் தணித்துக்கொள்வதற்கு ஒரு சாதகமாகும். இது புறத்திணையில் கூறப்பட்டுள்ள பாடாண் பெண்பாற் கூற்றுப் பக்கம் என்னும் துறையின்பாற்படும்.

இந்நூல் தமிழுலகத்திற்குச் சைவசித்தாந்தப் பண்பட இயற்றிய பெரியார் சொர்க்கபுரம் ஆகிய திருச்சிற்றம்பல தேசிகராவர். இவர் சோணாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ள திருவாப்பா மாகாணத்தைச் சேர்ந்த மாகாணஇலந்துறை என்னும் ஊரில் சோணாட்டு வேளாளர் குலத்தில் கி. பி. 17-ம் நூற்றாண்டின் இறுதியில் அவதரித்தனர். இவர் இளமையிலே போதிய கல்வியும் அறிவும் பெற்றுத் தருமபுர ஆதீனத்து ௭-வது பட்டத்திருந்த திருவம்பல தேசிகர்பால் கொட்டூர் ஆகிய சிற்றம்பலதேசிகர் தாயுமானவர் ஆகிய இவர்களோடு தாமும் ஒரு சீடராய் ஞானநூல் பல கற்று வந்தார். திருவம்பல தேசிகருக்குப் பின் இவர் ௮-வது பட்டத்திருந்த கொட்டூர் ஆகிய திருச்சிற்றம்பலதேசிகரையே ஞானாசிரியராகக்கொண்டு அன்னாரது முதல் முதல் கிளிவிடுதூது என்னும் இந்நூலைப் பாடியருளினர். பின் ஞானாசிரியர் திருவாணைப்படி சொர்க்கபுர மடத்துத் தலைவராயிருந்து திட்டை கூடி விளங்கினர்.

இவரது மகிமையைக் கேள்விப்பட்ட தஞ்சாவூர் மகாராஷ்டிர அரசர் பாதுஷாகிப் ஏகோஜி II அநேக பூஸ்திதிகளையும் இவருக்குக் கொடுத்துள்ளார். தஞ்சாவூர் மகாராணி ஸுஜானபாய் கி. பி. 1737-ல் அடிகள்

நிஷ்டையிலிருக்கும் கோலத்தைக்கண்டு தரிசித்து அருள் பெற்றதாகக் கனக்கண்டு பரவசமுற்று மாகாள இலந்துறைக்கு நேரில் வந்து தரிசித்துச் சொர்க்கபுர மடத்திற்கு மானியங்களும் அளித்துள்ளார். இது போல பலரால் விடப்பட்ட நிலங்களும் மானியங்களும் இன்றும் உள்ளன. இவரைக் குருவெனக் கொண்டு அருள்வழிப்பட்டோர் நாகை வடிவியாரும் அழகியாரும் என்ற பெண்களும், இவர் இளவலாகிய வைத்தியலிங்கத் தம்பிரானும் (1), பாயிரம்பாடிய அகரக்கொந்தை சுப்ப நாயனரும் ஆவார்.

இவர் அறிவானந்தசமுத்திரம் கிளிவிடுதூது விளைவுரை திரிபதார்த்ததீபம் சித்தாந்தநிச்சயம் அனுட்டானவிதி உசாத்தானத் தோத்திரம் அருட்பாமாலை என்னும் நூல்களை அருளிச்செய்து விபவஞ (1748–A. D.) கார்த்திகை மாதம் புனர்வசு நட்சத்திரத்தில் பரிபூர்ணமானர்.

இதனை இயற்றியோர் அழகிய திருச்சிற்றம்பலதேசிகர் என்பது அறிவானந்தசமுத்திரத்திற் கூறும் இவர் பிரபாவத்தானும், தாயுமானவர் அழகியதிருச்சிற்றம்பல தேசிகர் ஆகிய இவர்கள் நூலுக்கு அகரக்கொந்தை சுப்பநாயனர் இயற்றியருளிய

வள்ளலெனத் தமிழ்மாரி வழங்குமருள் வாயான்
மாகாள மிலந்துறையில் வருபரம குரவன்
தெள்ளுதமிழ்க் கிளிவிடுதூ தாதியாய்ப் பலநூல்
செய்துபல நாமநிலை செய்துதோகை செய்தே
விள்ளரிய மெய்க்குருவைச் சீடனு னவனும்
விளைவிமகிழ் தலுங்கூறி யறிந்தழுங்கல் விளம்பி
அள்ளிமகிழ்ந் துணவறிவா னந்தசமுத் திரமு
மரியதிரி பதார்த்ததீ பமுமருளி னனே. (எஉ)

என்னும் பாயிரச் செய்யுளானும், இந்நூல் இறுதி வெண்பாவினானும் புலனாகின்றது. மேலும் இந்நூல் அ-வது பட்டத்திருந்த கோட்டூர் அழகிய திருச்சிற்றம்பல தேசிகர் மீது பாடப்பெற்றுள்ளதென்பது இந்நூல் காப்புச்செய்யுளானும்

"வேதா கமவொலியும் மூவர்பா விள்ளொலியும்
நாதாந்தஞ் சென்றோர் நடத்தொலியும்-கோதில்
திருவா சகவொலியுஞ் சென்றுகடர்லோசை
பொருவாக வென்றும் பொருந்தும்-பெருவாழ்வு
சேர்ந்த தருமை தனிற் சேர்ந்தொளிரென் போலுருவம்
சார்ந்து பலகலைகள் சந்ததமும்-தேர்ந்தவன்பா
சம்பந்த நீக்கவரு சற்குருவா மெய்ஞ்ஞான
சம்பந்த னென்னவோர் பேர்தாங்கி-எம்பந்தம்
நீக்குமெல்லை பார்த்திருந்து நேர்ந்தவுட னென்னையழைத்
தாக்கினன் றன்க ணருணோக்கம்," (கஅ-உஉ)

"விண்ணவர்போற் றுந்தருமை மேவிமூனஞ் சொல்லியதோர்
அண்ணல்," (கஉஎ)

என்னும் சில கண்ணிகளாலும் தெளிவாகிறது.

இந்நூலாசிரியர் தம்ஞானசாரியர் மீது தம்மை ஆட்கொண்ட வரலாற்றைக் கிளிவாயிலாகச் சொல்லுவதன்மூலம் தமது வரலாற்றையும் அவர் பிரதாபத்தையும் நன்கு எடுத்துரைத்துள்ளார். திருக்கயிலாய மலைமேவும் சிவபிரான் தம் திருவுருக் கரந்து அன்பர்களை ஆட்கொள வேண்டி மெய்ஞ்ஞான சம்பந்தர் என்னும் பேர் பெற்றுத் தமக்கு ஞானசாரியராக வந்தார் எனவும், அவர் தமக்குப் பேரின்பம் அளித்தற்கு அறிகுறியாக அவர் மாலையை வாங்கிவா எனவும் கிளியைத் தூதுவிடுத்தனர். இவர் தம் குருவின்பாற் கொண்ட அன்பின் பெருக்கே செய்யுளாக வெளிப்பட்டதாகும். புத்தம் புதிய சொற்றொடரமைப்பும் உவம உருவகத்தோற்றமும் இதன்கண் செவ்வனே திகழ்ந்துள்ளன. தம் குருவை,

மலினஉடை மூன்றினையும் மாற்றியின்ப மென்னும்
கலைமுழுதும் போர்த்தகா ருண்யம் (ருo)

போக முழுதும் பொருளல்ல வென்றருளில்
தாகம் எழுப்புதற்கோர் சஞ்சீவி (ருக)

துன்பக் கடலுட் டுளைந்தமிழ்ந்திச் சோர்வேனை
இன்பக் கடலமிழ்த்து மேகாந்தம் (சுக)

கூறுதற்கொன் றில்லாக் குணமிலகு நாடதனில்
ஏறவரு ளேணிகொடுத் தேற்றியது (எக)

அற்றவிடத் தன்றி யகலிடத்தும் வானிடத்தும்
மற்றெவ் விடத்துமிலா மாணிக்கம் (அரு)

வீடாப் புலப்புனத்தை வெட்டியருள் வித்திட்டுத்
தேடா விளைந்ததொரு தெய்வீகம் (அஎ)

பவமணங்கள் சற்றுமெட்டிப் பாரா தகற்றிச்
சிவமணங்கொண் டுள்ளூலவுந் தேறல் (கூஎ)

எத்திக்கு மெவ்வுலகு மெங்கெங்குந் தானாகித்
தித்தித் திருக்குஞ் சிவபூமி (கoரு)

எனக்கூறும் உருவகமும்,

"என்புநிறை, சேரியினிற் செங்கழுநீர் பூத்ததுபோல்" (கூஉ)

"கருங்கற் பிசைந்து கனியாக்கல் போல்" (அஅ)

"ஆணியற்ற தேர்தான் அலைந்ததுபோல்" (கoரு)

என்பன போன்ற உவமையும் பார்ப்பவர் மனதைப் பரவசப் படுத்தாம லிரா. மேலும் தம் குருநாதர்க்குரிய மலை முதலிய தசாங்கங்களை உருவக வாயிலாகக்கூறியது மிகவும் போற்றத்தக்கது. தமிழ் மணத்தோடு சாத்திரமணமும் கமழ்வியுள்ளதனால் இது தமிழ்ப்பயிற்சி யுடையார்க்கும் சாத்திரப் பயிற்சி யுடையார்க்கும் மிக்க பயனைத்தரும்.

இவரது தெய்வீகத் தன்மையையும், இயற்கைக் கவியின் வன்மையையும், சாத்திரப்புலமையையும் இவர் இயற்றிய அறிவானந்த சமுத்திரம் என்னும் நூலில் காணலாம்.

இத்தகைய நூல் வெளிவரத் திருவருள் நோக்கம் புரிந்த திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து உச-வது பட்டத்து மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள் அவர்கட்குத் தமிழுலகம் நன்றி செலுத்தும் கடப்பாடுடையது.

மழவிடையா னானந்த வாரியிலே படிந்தருளை வாரி வாரிப்
பழமறையா கமப்பயிர்கள் படர்ந்தோங்க வருணீரைப் பாய்ச்சிப் பாய்ச்சித்
தழலனைய பிறப்பிறப்பிற் றுழுமுயிர்ப் பயிர்க்கருளைத் தந்தாட் கொள்ளும்
அழகியசிற் றம்பலவ னடியிணையை யனுதினமு மகத்துள் வைப்பாம். (கூஎ)

L. M. C. ஹைஸ்கூல்,
சீகாழி.
21—8—'38.

வித்வான், D. சுந்தரேசன்,
தமிழாசிரியன்.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கிளிவிடு தூது.

———:(o):———

காப்பு—நேரிசைவெண்பா.

ஐய னழகியசிற் றம்பலசம் பந்தன்மேல்
துய்ய கிளிவிடுதூ தோதுதற்குக்—கையினிள
மானையெடுத் தானடிய ரூனமறுத் தானளித்த
ஆனைமுகத் தானைநினைப் பாம்.

கலிவெண்பா.

பூங்கமல மேயவனும் புள்ளின்மேல் விண்டுவுஞ்சென்
றாங்குகீழ் நாடி யுணர்வரியோன்—தேங்கமழுங்
கொன்றைதும்பை கூனமதி கூவிளந்தண் வன்னியெருக்
கென்றுமக லாதணிந்த வெம்பிரான்—வென்றிபுனை
காமனுரு வேவநுதற் கண்விழித்துக் கையுகிரான்
பூமன் சிரசிலொன்று போக்கினான்—மாமனர
சிங்கவடி வைத்தடிந்து சிம்புளாய் வந்துசம
னங்கமிட றிக்கடிந்த வண்மையோன்—கங்கை
யலையிலலை யும்வேணி யையனன்ப ரன்பின்
வலையி லகப்படுமோர் வள்ளல்—தலைமாலை (௫)
பூண்ட பரமனம ரேசன் புராதனனற்
றுண்டவ மாடுந் தனிமுதல்வன்—காண்டற்
கரியா னனுமேய மல்லா னுரைக்கு
மரியா னெவர்க்கு மரியான்—பரியார்
மனத்திருளாய் நின்ற மறையோன் பரியு
மெனக்கருளாய் நின்ற விறையோ—னனைத்துலகாய்
நின்று நிறைந்தா னினைந்தாயு மன்பருன்
கொண்டா னவர்க ளுளங்குன்றான்—வண்டார்

பொழிலேய்ந் திரைதேரும் பூங்கிளியே மிக்க
வெழிலார் மொழியையியம் பக்கேள்—இழிவாய

காய மெடுத்துழன்று காலன்கை யிற்படுமுன்
மாயை மலங்கன்ம மாமாயை—தூய

திரோதாயி யைந்தினையுந் தீர்த்தெனக்கு மேலாம்
பரபோக மூட்டும் படிக்குத்—திரமான

அங்கத்தின் மானுந் தலைமானுங் கைமானுங்
துங்கச் சடையுஞ் சுடர்மழுவுங்—சங்குனிகர்

கண்டக் கறையுந் தமருகமுங் கார்க்குழலுந்
துண்டப் பிறையுமுழு வைத்தோலும்—வெண்டலையும்

பன்றி மருப்பும் படநா கமுமெலும்பும்
வென்றி புனைமழு விலைவேலும்—புண்டரிகக்

கண்ணாற் கண்ணு நுதற்கண்ணும் போரேறுந்
தண்ணாருங் கொன்றையிவை தாங்கரந்து—வண்ணப்

பிரமாண்ட வோடு பிளப்பபோற் செல்லுந்
தருவார் பொழில்கள்சூழ் தந்து—திருவாரும்

வேதா கமவொலியு மூவர்பா விள்ளொலியு
நாதாந்தஞ் சென்றோர் நடத்தொலியுங்—கோதில்

திருவா சகவொலியுஞ் சென்றுகட லோசை
பொருவாக வென்றும் பொருந்தும்—பெருவாழ்வு

சேர்ந்த தருமைதனிற் சேர்ந்தொளிரென் போலுருவஞ்
சார்ந்து பலகலைகள் சந்ததமுந்—தேர்ந்தவன்பா

சம்பந்த நீக்கவரு சற்குருவா மெய்ஞ்ஞான
சம்பந்த னென்னவோர் பேர்தாங்கி—வெம்பந்த

நீக்குமெல்லை பார்த்திருந்து நேர்ந்தவுட னென்னையழைத்
தாக்கினான் றன்க ணருளோக்கம்—வாக்கின்

மொழிகுழறிக் காறளர்ந்து மூச்செறிந்து முன்னே
விழிபொழிய மெய்புளக மெய்தித்—தழுதழுத்து

மோகித்து நின்றேன் முகமலர்ந்து தானிரங்கித்
தாகித்தா யென்று தகவுடையோ—னாகித்திட்
டாகமுத லாசைமுற்று மற்றனைநீ நல்லபரி
பாகியென்றுன் போதப் பதைப்பெல்லாம்—போகத் (௨௫)
தரையிற் பணிந்தேன் றலையின்மாக் கைவைத்
துரையுந் திரையு நுரையும்—கரையுமிலா
மேலாரு சிவானுபவ வேலைதனின் மூழ்குதற்கு
மாலாஞ் யென்று மனமகிழ்ந்து—நூலாலே
சொன்னபடி செய்யத் தொடங்கியுட னும்பெருளு
நின்னையுந்தா வென்று நிகழ்த்தி—னன்னபடி
யீந்தேன்றன் பாத விணைமலரென் புன்றலைவைத்
தாழ்ந்தார் களாலு மறிவரிய—காய்ந்த
பயிரினுக்கு மேகமது பாலித்தாற் போலென்
னுயிரினுக்குச் சொன்ன வொருசொல்—தயிரினுக்குள் (௩0)
மத்தினைப்போ லைந்து மலத்தாற் சுழன்றதொரு
சித்தமத னற்கேட்டுச் சிந்தித்து—வைத்துத்
தெளிந்துநிட்டை யெய்தினேன் சேர்ந்தமல சத்தி
விளிந்துசெல வாங்கே விளைந்த—துளைந்த
பவத்திய கல்லொருபா காகத்தந் தன்றிச்
சிவத்தே னளித்திருந்த தெய்வம்—உவப்பிற்
பிடிக்கப் பிடிக்குமன்றிப் பேருமிந்த வாயால்
படிக்கப் படாதவருட் பண்பு—பிடிக்கநீ
சும்மா விருவெனவே சொல்லி வருமமுத
மம்மாவெம் போதத்தா லாய்ந்துண்ண—வெம்மால்கள் (௩௫)
கொன்றாலும் வாராக் கொழுந்தேனை ரைம்புலனும்
வென்றாலும் வந்து விளைவறியா—தென்றாலும்
துட்டநாய் போன்ற துகளென் னுளத்துவந்து
கிட்டியது கிட்டாத் கேண்மையே—கட்டிவிடா

நாயும் வினையுடனா நுங்கியுளச் செய்முழுதும்
ாயும் வடிவுமொரு பாலாறு—நேயமுட
னோங்கி யெழுந்துளத்தி னோடி மனமழியத்
தங்கிவடி கின்றதொரு தேனாறு—நீங்காது
ாராமற் பார்த்தயர்ந்த பக்குவத்தி னோடிவந்து
நராம னேர்ந்ததொரு நெய்யாறு—தீரா
நுருகித் திரிவிதமா லோடி யொருமால்
பெருகப்பே ருகும்பே ரின்பந்—திரியுமுள
மாடாம னின்றுரு மன்பு மிகுத்துருகித்
தேடாமல் வாராத தெள்ளமுதம்—வாடி
யொடியாப் புலனைந்து மோட்டியபின் வாயாற்
கடியாம லுண்ணவந்த கன்னல்—வடியாத
ஆற்றுமணல் போலுருக்கி யுண்ணெகிழ்ப்பித் தவ்வழியே
தோற்றுகின்ற வின்பச் சுகநேயம்—நோற்றுநின்று
வாணா ளுலவாமுன் வாவென் றயர்ந்தேற்குக்
காணாமற் காட்சிதந்த கற்கண்டு—கோணாய
தீர்ப்பரிய யானெனது தீரா தவரெல்லாம்
பார்ப்பரிய தெய்வப் பனியாறு—பார்த்துகந்து
தட்டாம லுள்வாங்கித் தாக்காமற் றுக்கியெனக்
கெட்டாம லெட்டவந்த வின்பவெள்ளம்—விட்டுக்
குறியாக் குறிப்பைக் குறிக்கொண்டு நின்றங்
கறியா தறியுநல் லானந்தம்—பிறியாது
சேராமற் சேர்ந்து தெளிந்துநின்று லக்கணமே
வாராமல் வந்துலவும் வானாறு—தீரா
மலினவுடை மூன்றினையு மாற்றியின்ப மென்னுங்
கலைமுழுதும் போர்த்தகா ருண்யம்—உலைவைத்
துருக்க வுருக்க வொளிவிடும் பொன்போ
லிருக்க விருக்கவொளி ரின்பஞ்—சுருக்கமில்லாப்

பந்தவுட னும்வினையும் பாழிருளும் போயகல
வந்துலவுந் தூண்டா மணிவிளக்கு—நொந்தறிவு

தேயாது பாயாது தேடி யுறும்பொழுது
வாயாது வாய்த்த மலைமருந்து—காயாது

தேடிநொந்து நெஞ்சந் தியங்கி மயங்கும்போ
தோடிவந்து நின்றதோ ருற்சாகம்—நீடியதோர்

பற்றற்ற தின்றிப் பதைப்பற் றிருந்தவுடன்
முற்றத்தி னூறு முழுப்பாகு—பெத்தத்தில் (௫௫)

போக முழுதும் பொருளல்ல வென்றருளிற்
றாக மெழுப்புதற்கோர் சஞ்சீவி—பாகமுறத்

தான்றழுவ நான்றழுவத் தானெதிர்க்க நானெதிர்க்கத்
தேன்றிகழத் தான்றிகழுஞ் செய்யகனி—யூன்றியங்குத்

தூண்டாமற் றூண்டிநின்று தோயாமற் றோயவதிற்
றோன்றாமற் றோன்றுஞ் சுகவாரி—காண்டற்கு

நண்ணரிது நண்ணரிது நாடரிது நாடரிது
நுண்ணுணர்வி னுண்ணுணர்வி னுண்ணுணர்வு—வண்ணக்

கிரியைக்கும் யோகுக்குங் கேட்டதெளி தற்கும்
வருதற் கரியபெரு வாழ்வு—பெருகியதோர் (௬௦)

துன்பக் கடலுட் டுளைந்தமிழ்ந்திச் சோர்வேனை
யின்பக் கடலமிழ்த்து மேகாந்த—மென்புநிறை

சேரியினிற் செங்கழுநீர் பூத்ததுபோ லென்னுள்ள
வேரியின்ப வாரியெழுந் தெய்தியது—சீரியதோர்

வேதங் கடந்ததற்கு மேலாகி யேநின்ற
நாதங் கடந்ததொரு நல்லவெளி—போதமின்றி

யுய்வேமோ வுய்யேமோ வென்றுருகி நின்றவென்
னையந் தணிக்கவந்த வன்பாழி—வெய்யபவ

கேதமே வந்து கெடாம லெனைவளர்த்த
போத மறுத்துகந்த போரேறு—நீதமுறு (௬௫)

மொன்றன் றிரண்டன் றுருவன் றருவமுமன்
றென்றென்று நின்றிலகு மின்னமுதம்—நன்றிபுனை

மண்ணன்று நீரன்று தீயோடு வாயுவன்று
விண்ணன்று காலாதி வேறன்றே—யெண்ணினது

ஞாதுருவு மன்றியே ஞானமே யங்கழன்ற
மேதினியி னின்ப வெள்ளாறு—போதமுற

வோடாம லோடி யுருகி யழைத்தேற்குக்
கூடாமற் கூடுங் குண க்குன்று—நாடி

னுதிப்பீறு நிற்புமிலா வூர்நாடி யோடிப்
பதைப்பறவே வந்தசெந்தேன் பாகு—விதிப்படியே (௭௦)

கூறுதற்கொன் றில்லாக் குணமிலகு நாடகனி
லேறவரு ளேணிகொடுத் தேற்றியது—கூறு

மிருட்பே யிரியவெனக் கின்ப மளித்தங்
கருட்பேயின் கைக்கொடுத்த வன்பு—மருட்செய்

நெருப்பனைய வைம்புலனு நீங்கியளி கூர்ந்தங்
கிருப்பதற்கு நின்றதோரின் னீழல்—வருத்தமுறப்

பாழுக்கு முத்துலையும் பாரித் திறைத்தலந்த
வேழைக்குச் சும்மா விரங்கியது—கோழையெனை

யொண்பகலு மோரிரவு முண்பொழுதும் போம்பொழுதுங்
கண்படையி னும்பரிந்து கவ்வியது—பண்புடைய (௭௫)

தானீர்த்த லன்றியிந்தத் தற்போதங் கொண்டாங்கே
யானீர்க்க வாரா வினியதரு—வூனேற்ற

துன்ப மகலவெனைத் தூக்கி யிருளிடித்திட்
டின்பஞ் சொரியு மெழின்மேக—மன்பா

லுளைப்பார்க் கினியானென் றாழ்தலைப்பட் டெய்த்தேற்
கிளைப்பாற்றி யின்பூட்டு மெல்லை—களைப்பாறித்

தாக்கற்குப் பேருந் தகர்போல வென்னிடத்தி
னுக்கற்குப் பேரு மளியானைப்—பார்க்கி

னிசையா திசைந்தங் கெழாதே யெழுப்பி
யசையா துளவா மலகந்—திசையா (அ0)

ருயர்வு மிழிவு முணர்த்தா துறையு
மயர்வை யறுக்குமின்பா காயம்—பயனில்லாச்

சுற்றுவறி ஞர்க்கனந்தஞ் சொன்னங் கிடைத்ததுபோற்
செற்ற விடத்தெழுந்த தேனேரி—பற்றி

நினைத்து நினைத்துருகி நெக்காம னெக்கி
யனைத்து மொளிக்கிடத்தா தாரம்—வினைப்படியே

சுற்று மனப்பாவை சுட்டறிவு கெட்டறவே
வற்றுமிடத் தோடி வருமுறவு—பற்றுமுற்று

மற்றவிடத் தன்றி யகலிடத்தும் வானிடத்து
மற்றெவ் விடத்துமிலா மாணிக்கங்—குற்றமிலா (அ௫)

வானோர்க்கு மண்ணோர்க்கு மாலயர்க்கு மன்றியிறு
மேனோர்க்கு மெய்தரிய வின்சோதி—யூனார்ந்து

வீடாப் புலப்புனத்தை வெட்டியருள் வித்திட்டுத்
தேடா விளைந்ததொரு தெய்வீகம்—காடார்

கருங்கற் பிசைந்து கனியாக்கல் போலென்
னிரும்பைக் குழைத்தவிள வேனில்—கரும்பான

வன்னைதனி லும்மினிய வையர்தா ளுண்ணினைந்து
தன்னை மறக்கவந்த சையோக—மென்னறிவால்

தாழாமற் றாழ்ந்து தலைகொடுத்து நின்றேற்கு
வாழாமல் வாழவந்த மாநிதியஞ்—சூழி (௯0)

னிருட்டி னிருட்டை யிகலி னிகலை
வெருட்டி மிரட்டுமின்ப வெய்யி—லரட்டின்றி

நேடிப் பலகா னெறிநோக்கி நின்றுருகி
னாடிப் புணருமின்ப வுல்லாசம்—நீடுஞ்

சகலத்துங் கேவலத்துந் தாக்காமற் றன்ற
னகலத் தெனையிருத்து மன்னை—யிகலுற்றுத்

துன்றியதோ ராறு வகைச்சமயத் தொல்கலையைச்
சென்றும் பறந்துகொளுந் தேறுமுழைவை—கன்றியதோ

ருள்ளத் திருட்கரியை யோடிப் பிடிப்பதற்குத்
தெள்ளித் தெளிந்தவின்பத் தீமடங்கல்—துள்ளியநற் (கூரு)

றோத்திரத்தும் பூசையினுஞ் சொல்லுநிய மங்களினுஞ்
சாத்திரத்துஞ் சாபவொட்டாத் தாளாண்மை—பார்த்துப்

பவமணங்கள் சற்றுமெட்டிப் பாரா தகற்றிச்
சிவமணங்கொண் டுள்ளுலவுந் தேற—லுவமையென்று

நாட வரியபிர மாண்டமுதந் துதமட்டுந்
தேட வரியதொரு சிங்காரங்—கேடின்றிப்

பேணுதற்கு மென்னைப் பிணிப்பதற்கும் பேரிடமாயக
காணுதற்கு நல்லின்பக் கண்ணாடி—வீணின்றிப்

பேசுதற்கு வந்தொருவர் பேசவல் லார்களுடன்
பேசுதற்கெட் டாதிருக்கும் பேராண்மை—வீசுமத (கoo)

யானை யினுங்கொடிய வைம்புலவீ ரங்குலைந்திட்
டூனை யுருக்குமின்ப வுள்ளூறல்—வானுருங்

கஞ்சா சனவரவிற் கட்டவிழ்த்து விட்டோடி
யஞ்சா திருப்பதற்கோ ரத்தாணி—யெஞ்சாத

வாணியற்ற தேர்தா னலைந்ததுபோன் முமமலமு
நாணியறப் பூண்ணுமொரு ஞானமலை—நீணாகர்

வானோர்கண் மண்ணோர்கண் மற்றுமுள்ள பல்லுயிர்கள்
போனாற்பின் மீளவிடாப் பொன்னுலகு—நானாக

நீளாம னீட்டிநினை யின்வைத்து நின்றேறற்கு
மீளாமன் மேற்கொண்ட மெய்புணர்வு—வாளாரு (கoரு)

மெத்திக்கு மெவ்வுலகு மெங்கெங்குந் தானாகித்
தித்தித் திருக்குஞ் சிவபூமி—பத்தியினால்

சித்தா முழுவுழுது பேரன்பாற் கண்பதித்துச்
சித்தாந்தச் செய்பழுத்த தீங்கதலி—யெய்த்துநின்று

நாணும னணியதோர் நாட்டி னொருவருமே
காணுமற் செய்ததொரு கல்யாணந்—தாணு

விபுவென்ன நாடி மெலிந்தபோ தென்னுட்
குபிரென் றெழுந்தசெந்தேன் கொப்பு—ழுபநிடத்து

நில்லாம னின்றெங்கு நேடாம னேடியிட
மெல்லாமல் மெல்ல வருவெல்லம்—பொல்லாத (௧௧௦)

மண்ணை யிரணியத்தை மங்கையரை நீங்கியின்ப
வெண்ணெய் தகவளித்த மேம்படுகோல்—திண்ணமுறப்

பண்டை யிருண்மலமும் பண்டை வினைமலமும்
விண்டு கழித்தேறு மேல்வீடு—பண்டை

யொழியாப் புலனைந்து மோடியபோ தேறி
யிழியாம லேபுகுது மில்லந்—தழுவிப்

புகட்டாம லுள்ளே புகட்டியங்கே யென்றுந்
தெகிட்டாம னின்றதித் திப்புப்—பகட்டுப்

பிரியாப் பிரியமெனும் பேய்க்கணங்க டன்னைத்
துரியங் கடந்தசுக மேடை—தெரிவரிய (௧௧௫)

கல்வியெனுந் தீராக் கலக்க முழுதினுக்கு
மொல்கியிளைப் பாறுதற்கோ ருப்பரிகை—சொல்லரிய

வுள்ளும் புறம்பு மொழியா வெளியின்வரச்
சொல்லி யழைக்குஞ் சுகாதீத—மொல்லையே

யூறும லூறி யுளமவிழ்ந்தங் கேயுன்னி
மாறுத வெய்ப்பின் வருவைப்புப்—பேறுகத்

தன்னைநினைப் பித்துமரு டன்னையுதிப் பித்துமன்றி
யென்னைமறப் பித்துமெனக் கெய்தியது—வன்ன

வுருவு மருவுமின்றி யோர்குடியு மில்லாத்
தெருவிற் சமைந்தொழுகுந் தீந்தேன்—தெரிவைத் (௧௨௦)

தெரியாமற் றேர்ந்த திகைப்புமறந் தின்பந்
தரியா துதவுந்தாய் வீடு—தெரிவரிய

ஈத்தவருட் பேய்தொடர்ந்து சோரவிட்ட தன்றியெனைப்
பித்தனெனப் பண்ணியதோர் பேரறிவு— நித்தமெனைத்

தானே பிடித்துமுத்தந் தானே வழங்கியதின்
றேனோ வருத்துமதற் கென்செய்கேன்— ஊனு

ருருகவொரு நோக்களித்த வுத்தமன்மீ தாசை
பெருகமயல் கொண்டுபித் தானேன்—திருமருவு

கிள்ளையே நீயெனக்குக் கிட்டாது கிட்டுகையா
லுள்ளதெல்லா மிப்போ துரைசெய்தேன்—விள்ளாத (௧௨௫)

வுண்மையிது வாயிடினு முன்னைவிட வேறொருவ
ருண்மையிலை யத்தா லுரைத்தேன்காண்—வண்ணமற்ற

விண்ணவர்போற் றுந்தருமை மேவிமுனஞ் சொல்லியதோ
ரண்ணல் சமுகமறிந் தாதரவாய்—நண்ணியவன்

செய்யவடித் தாமரையிற் றாழ்ந்தெழுந்து சேர்ந்துநின்று
கையின்மழு மான்கரந்த கற்பகமே—ஐயனே

மாதர்பொன்பூ வென்னுநகை மாபுலிகட் கஞ்சினோர்
வேதனை தீர்த்தேற்றும் வெற்புடையாய்—கேதநல்கும்

பாசமொரு மூன்றுதொட்ட பங்கமற வேநினைந்தோ
ராசையுடன் மூழ்குமின்ப வாறுடையாய்—தேசுறுநன் (௧௩௦)

மந்திரத்தோ டாறு வகைகாட்டிப் பட்டதுயர்
நந்தல்செய்து வாழவைத்த நாடுடையாய்—சந்ததமுந்

தாங்கரிய வைம்புலக் கள்வரீர் துக்கந்தீர்ந்
தோங்கியிளைப் பாற்றுமின்ப வூருடையாய்—தேங்கமழும்

பங்கயன்சேர் பூமிவை குந்தமட்டு மப்பாலு
மெங்கு மணக்குமிசைத் தாருடையாய்—மங்காது

மாயுமுயிர்ப் பாசப்புண் மாய்த்தழித்துச் செல்வதற்குப்
பாயுமரு ணோக்கப் பரியுடையாய்—நேயமுட

னையுமைந்து கோசமெனுங் கோட்டையிடித் தைந்துமலங்
காயுங் கருணைக் களிறுடையாய்—வீயாது (௧௩௫)

பந்தமுற்ற பல்லுயிர்கள் பாசமறத் துப்பரத்தை
நந்தாம லேகொடுக்கு நற்கொடியாய்—பந்தத்

தழுங்காம ஞரு மரணையுன்னி ரென்று
முழுங்குமறைச் சைவ முரசோய்—வழங்குமனந்

தாவா நவபோதந் தாரும் நடித்தவற்றைக்
கோவாய் நடத்துஞ்செங் கோலுடையாய்—ஓவாத

சீருடையாய் நந்தாத் திறலுடையா யாயிரநற்
பேருடையா யின்பம் பெரிதுடையாய்—ஏருடையாய்

தேனே கனியே தெவிட்டாத தெள்ளமுதே
வானோ ரறியா மணிவிளக்கே—கோனேயென் (கசய)

கண்ணே கருணைபொழி காரே கருதருநற்
பண்ணே பவவரவின் பற்பட்ட—புண்ணுற

வந்தமருந் தேயென்று வாழ்த்தியொரு விண்ணப்பஞ்
சிந்தை மகிழ்ந்து திருச்செவியி—லெந்தையே

சாத்தியரு ளாயென்று சாற்றியவன் முனிரங்கிப்
பார்த்துவிளம் பென்றுவரம் பண்ணியபின்—தீர்த்தனே

மட்டவிழ்பூத் தூய்த்தொழுது மாதவர்சூழ் நின்சபையில்
கிட்டிநின்றநோக்கங் கிளர்ந்ததனல்—கட்டியநற்

பஞ்சகலை யுஞ்சேர்ந்து பாசவலை யுங்கழல
வெஞ்சா வனுபவத்துக் கிச்சைகொண்டு—தஞ்சமெனத் (கசரு)

தேம்பிநின்ற போதண்ண றேவரீர் சித்தமகிழ்ந்
தாம்படிநல் லின்ப மளித்ததனல்—சோம்பாம

லன்றுமுத லின்றுவரை யவ்வின்ப மேபுசித்து
நன்றுதீ தென்றுசுட்டி நாடாமல்—என்றும்

பிரியா திருந்து பிரிந்தமையா னெஞ்சந்
தரியா தழுங்கித் தவித்திட்—டெரியு

மெரியிற் பொரிகின்ற வெள்ளிணைப்போற் றுள்ளிக்
கருகிமுக மெய்சோம்பிக் கண்ணீர்—பெருக

வழுது புரண்டிங்கே யங்கத்தை நீக்கிற்
பழுதெனவே யெண்ணிப் பதைத்துக்—கழுது
பிடியுண்ட பேர்களைப்போற் பித்தாய் மயங்கி
மிடியுண்டோர் மேவுதுயர் மேவிப்—படியுண்ட
விப்புதுமை யென்றுகண்டோ ரெல்லா மிகழ்ந்துவசை
செப்பியிட வொன்றுந் தெரியாதே—வெப்பமுடன்
பஞ்சபுல வம்பாற் பழுத்தவினை வேரெரிய
விஞ்சு துயராய் மிகமெலிந்திட்—டஞ்சியே
மெத்த வருத்தமுற்று வீயாத வன்பினுக்கே
மெத்த விரும்பி விடாய்கொண்டு—சித்தநைந்து
நின்றதைய லுய்யுமா நின்றிருநோக் கம்மளித்து
மன்று ணிறைந்தவருண் மாமலையே—குன்றாத
பேரின் பமுமளிக்க வேண்டுமென்று பேசியிப்போ
தார்துன்ப நீங்க வடியேன்சொற்—றேராக்
குறியொன்று காட்டுதற்குக் கோவே கரந்த
வெறிகுன்றாக் கொன்றைவெறி யாக்கி—வறியேன்றன்
கையிற்று வென்றதனை வாங்கிக் கடிதுகொண்டிங்
குய்யயான் வாரா யுவந்து.

---

வெண்பா.

கலங்காத வுள்ளத்தாற் காணுங் கனியை
மலங்கெடத் தீர்க்கு மருந்தை—இலங்கையுறை
அத்த னழகியசிற் றம்பலசம் பந்தனைச்
சித்தத்துள் வைப்பேன் றினம்.

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேவர் மெல்லடி வாழ்க.

---

குருபாதம்.

# குறிப்புரை விசேடவுரை.

காப்பு—ஆசீர்வாதம் நமஸ்காரம் வஸ்துநிர்த்தேசம் என்னும் மூவகை மங்கலவாழ்த்தும் அமைந்துள்ள இவ்விநாயக வணக்கம் ஆன்றோர் ஆசாரம் பாதுகாத்தற் பொருட்டும் மாணக்கருக்கு அறிவுறுத்தற் பொருட்டும் இந்நூல் இனிது முடிந்து இதனை ஓதுவார் சிவஞானசித்தி யடைதற் பொருட்டும் முன்னர்க்கூறப்பட்டது. இந்நூலின் வரலாறும் இலக்கணமும் பாடினோர் பாடப்பெற்றோர் பிரபாவமும் பிறவும் முகவுரையிற் கண்டுணர்க.

இந்நூல் கலிவெண்பாவினால் ஆயது. இக்கலிவெண்பாட்டின் சொன் முடிவு வருமாறு:—

அயனும் விண்டுவும் நாடி உணர்வரியோன் க, உளங்குன்றன் கூ, எனக்குக் கூட்டும்படிக்கு கஉ, பூங்கிளியே கேள் கO, கைமானும் கஈ, .........போரேறும் கரந்து கக, தருமைதனில் உO, பேர்தாங்கி உக, என்னை அழைத்து அருள்நோக்கம் ஆக்கினன் உஉ; மோகித்து நின்றேன்; தான் இரங்கி உச, நீ பரிபாகி என்றன் உரு; பணிந்தேன் உகூ; மனமகிழ்ந்து உஎ, தா என்று நிகழ்த்தினன்; அன்னபடி உஅ. ஈந்தேன்; தன் இணைமலர் என் தலைவைத்து உகூ, ஒரு சொல் சொன்னன் ஈO; நிட்டை எய்தினேன்; மலசத்தி விளிந்து செல விளைந்தது ஈஉ; தெய்வம் ஈஈ................போறிவு எனை கஉஉ, பிடித்து முத்தம் வழங்கியது; வருத்தும் என்செய்கேன் கஉஈ; பித்தானேன் கஉச; கிள்ளையே! நீ கிட்டு கையால் உரை செய்தேன் கஉரு; உரைத்தேன்காண் கஉகூ; (நீ) அண்ணல் சமுகம் அறிந்து நண்ணி அவன் கஉஎ, தாமரையில் தாழ்ந்து எழுந்து நின்று கற்பகமே கஉஅ, ......வந்த மருந்தே என்று வாழ்த்தி ஒருவிண்ணப்பம் திருச்செவியில் கசஉ, சாற்றி, அவன் வரம் பண்ணிய பின் தீர்த்தனே! கசஈ, நின்சபையில் கிளர்ந்ததனால் கசச, பாசவலையும் கழல இச்சைகொண்டு கசரு, தேம்பி நின்றபோது தேவரீர் நல் இன்பம் அளித்ததனால் கசகூ, புசித்து கசஎ......மேவி கருக, இப்புதுமை கண்டோர் செப்பியிட வெப்பமுடன் கருஉ, நின்ற தையல் உய்யும்.........

மாமலையே! கருடு, பேரின்பமும் அளிக்கவேண்டும் என்றுபேசி, துன்பம் நீங்க, சொல் தேரா கருசு, குறியொன்று காட்டுதற்கு, கோவே! கொன்றை வெறியாக்கி கருள், கையில்தா என்று அதனை வாங்கி யான் உய்ய உவந்து வாராய் எனச் சொல் முடிபு கொள்க.

நூல்—(பக். க, க—கூ) பூ என்பது மங்கல மொழி. எல்லாம்வல்ல இறைவன் தமது சிற்சத்தியால் ஆன்மாக்களை உய்வித்தற் பொருட்டுத் தோற்றுவிக்கும் நிவர்த்தி முதலிய கலைகளின் அதிதெய்வமாகிய பிரம விஷ்ணுக்கள் முடியையும் அடியையும் காணாத பெற்றிமையை முன்னர் எடுத்துக்காட்டிச் சிவபெருமானே பரம முதற் காரணர் என்பதை விளக்குகின்றார். இறைவனது அதிஷ்டானத் திருமேனிகளைத் தவிர ஏனைய தேவர்களால் காணமுடியாத பெற்றியர் மூவகை ஆன்மாக்களுள் சகலர்களைக் காத்தற்பொருட்டுப் படர்க்கையில் ஞானசம்பந்த பரமா சாரிய சுவாமிகளாய் எழுந்தருளி வந்து அநுக்கிரகிக்கின்றனர். இதற்குப் பிரமாணம் திருவுந்தியார்—அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள், சகளமாய் வந்ததென் றுந்திபற, தானாகத் தந்ததென் றுந்திபற என்பது. குருஞானசம்பந்தப் பெருமானே தருமபுர ஆதீனத்துப் பரமாசாரிய சுவாமிகளாய் எழுந்தருளிவந்து மெய்கண்ட பரம்பரையில் இந்த ஞான பீடத்தில் வீற்றிருந்து திருவருட் செங்கோல் நடாத்தி வருவதால், இவ்வாதீனகர்த்தர்கள் தங்கள் ஞானாசாரிய அபிஷேகத் திருநாமத்தோடு ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள் என்னும் அபிதானமுஞ் சேர்த்துப் போற்றப்பெற்று வருகின்றனர். இது தொன்றுதொட்டு வருவதோர் சம்பிரதாயம் என்பது இந்நூலாலும் பிறநூலாலும் ஆதீனகர்த்தரவர் களின் ஆட்சியாலும் விளங்கும்.

பூங்கமலம்-சிற்சத்தி ஆணையால் திருமாலின் உந்தியிற் பூத்த தாமரை. புள்-கருடன். ஊங்கு கீழ்-மேலும் கீழும், முடியும் அடியும். கூவிளம்-வில்வம். காமனை எரித்தது முதலிய வீரச்செயல்களைப் புராண வாயிலாற் கேட்டுணர்க. உகிர்-நகம். சிம்புள்-சரபம். மா மன்-இலக்குமி தங்கிய. சமன்-யமன். வேணி-ஜடை. தேவர்க்கும் எட்டாத மாதேவரா யினும் பத்தர்களது பத்திவலையிற் படுவோராதலின், அன்பர் அன் பின் வலையில் அகப்படும் ஓர் வள்ளல் என்றார். தலைமாலை-கற்பகாலத் தில் சங்கரிக்கப்பட்ட பிரமாதிகளின் சிரமாலை. அமரேசன்-

## [illegible]

தேவர்களுக்குத் தலைவன். புராதனன்-பழையோன். [illegible] தம், பஞ்சகிருத்திய நடனம். காண்டற்கு அரியன் [illegible] அல்லான் உரைக்கும் அரியான்-பிரத்தியக்ஷம் அநுமானம் [illegible] என்னும் மூன்று பிரமாணங்களுக்கும் எட்டாதவன். பரியார்-அன்பில் லாதவர். பரியும்— அன்பு செய்யாத. ஆயம்-கூட்டம். [illegible] கிளியே இயம்பக்கேள் "எம்பிரான் நாமமதனில் [illegible] என்ன ஓர் பேர்தாங்கி" எனக் கூறியருளினர். இந்த ஆறுமுக சம்பந்தராது பரம்பரையில் எழுந்தருளிய அருள் [illegible] தேசிகசுவாமிகளாரும் அவருக்கு முன்னேயோர்களில் இருவரான [illegible] ஞாலசுத்துக் குதிக்கும் வண்ணமே [illegible] மானவசுவாமி தமது திருப்பாடல் [illegible] "[illegible] கள் போகாம னன்னெறியைக் காட்டுவன [illegible] கண்புனைய்ப தெந்நாளோ" என்று குறிக்குள்ளார். (பக் உ, ௯௦-௨ [illegible]

காயம்-சரீரம்; பரசரீர மூன்று, சூக்குமசரீரமொன்று, தூலசரீ மொன்று. அசுத்தமாயையில் அநந்த தேவரால் கலக்குண்ட பாகமாகிய காரணசரீரமென்னும் பரசரீரமொன்று; இது ஆநந்தமயகோசமென்னப் படும். வித்தியாதத்துவங்களாகிய பஞ்சகஞ்சுகமென்னுஞ் சரீரமொன்று இது விஞ்ஞானமயகோசமென்னப்படும். பஞ்சகஞ்சுகத்தி லொன்றாகிய கலையிற்றோன்றிய அவியக்த வியக்த ரூபமாகிய குணசரீரமென்னும் பரசரீரமொன்று; இது மனோமயகோச மென்னப்படும். மனம் புத்தி அகங்காரந் தன் மாத்திரையைந்துமாகிய சமூகஞ் சூக்கும சரீரம்; இது புரியட்டகமெனவும் பிராணமயகோசமெனவும் படும். ஏனையது தூலசரீரம்; இது அன்னமயகோசமென்னப்படும். இவ்வாறு புருடனொருவனே ஐந்து சரீரங்களோடுங் கூடி வினைக்கீடாகப் பிறப்பு இறப்பு அடைவன். பாசம் ஐந்தாவன:—ஆணவம், அறியாமை மிக வுண்டாம்படி ஆன்மாக்களோடுஞ் சகசமாய் அநாதியாயிருப்பது. திரோ தாயி, ஆணவமலத்தோடுங் கூடி நின்று அது பக்குவமாமளவு மான் மாவை மறைத்து அந்தமலத்தைப் பாகம்வருவிப்பது. மாயை, ஆன்மாக் களுக்குத் தனுவாதிகளைக் கொடுத்து மயக்கத்தைச் செய்விப்பது. கன்மம், ஆன்மாக்களோடும் விரிந்தனுபவமாய் நிற்பது. மாயேயம், ஆன் மாக்களின் சுக துக்க விளைவுகட்கெல்லாம் இடமாய் நின்று அவற்றின் அறிவு இச்சை செயல்களை ஏகதேசப்படுத்துவது. மாயை—சுத்தமாயை

அசுத்தமாயை பிரகிருதிமாயை என மூன்றும். கன்மம்—சஞ்சிதம் பிராரத்துவம் ஆகாமியம் என மூன்றும். அங்கத்தின்மான்—உமாதேவி யார். தலைமான்—கங்காதேவியார். ஆணவமலமுடைய விஞ்ஞானகலரைத் தன்மையிலும், ஆணவம் கன்மம் இரண்டனையும் உடைய பிரளயாக லரை முன்னிலையிலும் ஆட்கொண்டருளும் பரமேசன் மும்மலங்களையு முடைய சகலரில் பக்குவருக்கு இருவினையொப்பு மலபரிபாக முண் டாகிச் சத்திநிபாதம் விளைந்தவழி மானைக்காட்டி மானைப் பிடிப்பது போலக் கடவுள் தம்முருக்கரந்து மானிடச் சட்டை சாத்திக்கொண்டு குருமூர்த்தமாயெழுந்தருளி மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதர மறிந்து சமயதீட்சை பண்ணிச் சரியை யனுட்டிப்பித்து, விசேட தீட்சை செய்து கிரியா யோகங்களை யனுட்டிப்பித்து, நிருவாணதீட்சை புரிந்து ஞானமனுக்கிரகித்து மும்மலங்களை நீக்க, ஆன்மாக்கள் அழிந் தார்களுமில்லையாய், அந்தச் சிவமுதலானோர்களு மில்லையாய், சிவமுத லின்றிக் காரியப்பட்டார்களு மில்லையாய், அம்முதலுக்கு வேறாயிருந்தார் களுமில்லையாய், கேவல விசிட்ட மறுதலை யத்துவிதங்களைக் கடந்து அப்பதியோடு சுத்தாத்துவித நிலையினை யடைவிப்பர். இதற்குப் பிரமா ணம் சிவஞானபோதம் "தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த" என்பதும், சிவஞானசித்தியார் "மன்னும் அருட்குருவாகி வந்தவரின் நீக்கி மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்" என்பதும், இருபாவிருபஃது "கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி—மண் ணிடையின் மாக்கண் மலமகற்றும்" என்பதுமாம். கண்டம்—மிடறு. கறை-விஷம். கார்க்கழல்-வீரத்தின் வலிமை வாய்ந்த காலணி, காற்கழல் என்பதும் பாடம். உழுவை - புலி. புண்டரீகக் கண்ணன் - விஷ்ணு. கொன்றை சிவபெருமானுக்கும் செங்கழுநீர் ஆசாரியருக்கும் அவர் மரபினர்க்கும் உரியன.

கண்ணி கக-முதல் உ௦-வரையில் தருமபுரத்தின் பெருமை கூறப் படுகின்றது. வேதாகமம் வடகலையையும் மூவர்பா முதலியன தென் கலையையும் உணர்த்தும். உக-வது கண்ணியில் மெய்ஞ்ஞானசம்பந்தன் என ஞானசாரியசுவாமிகளின் திருவருள் திருநாமத்தைத் துதிக்கின்றார். குருவின் அருணோக்கம் பெற்ற ஆநந்த பரவசம் இன்ன தன்மைத்தாம் என்று கூறுவது கவனிக்கத்தக்கது. (பக். ௬, உச—௬எ) பரிபாகி-மல பரிபாகம் உற்றவன். போதம்-தற்போதம். கைவைத்தல்-ஆசாரியன்

செய்யும் ' பரிசநீட்சை. வேலை-கடல். மால்-மயக்கம், பிரியம். உடல் பொருள் ஆவி தருதல்-தற்சுதந்தரம் . இன்றி அவற்றைக் குருவுக்கு அர்ப்பணஞ்செய்தல், இறைபணி நிற்றற்கு முதல் உபாயம். கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடும் முறை சித்தியாருட் காண்க. ஆணவமலத்தின் சத்தி ஆவாரகசத்தி அதோநியாமிக சத்தி என இரண்டாம். எம்பிரான்......உளங்குன்றுன் என்பதுகாறும் பதியியல்பு கூறி அதன்பின்னர்ப்பசுஇலக்கணம் சாற்றினவர் ஈண்டுப் பாசவிலக்கணமும் அதன் நீக்கமும் கூறுகின்றார். பவம்-பிறப்பு (பக். ௪, ௩௮—௫௧) இங்கு வரும் உருவகங்கள் போற்றத்தக்கன. [illegible]ான்-தனுகரணம் ஆகிய அகங்காரம். எனது-புவன போகமாகிய மமகாரம். மலினவுடை-தூலம் முதலிய மூன்று சரீரங்கள். நாதங்கடந்த-பிருதிவிமுதல் நாதம் இறுதியாயுள்ள ௩௬ தத்துவங்கள். ஆன்ம தத்துவம் ௨௪, வித்தியா தத்துவம் ௭, சிவதத்துவம் ௫. இவற்றின் விரிவை உண்மை விளக்கத்துட் காண்க. கேதம்-துன்பம். (பக். ௬, ௬௬—௭௬) ஞாதுரு-காண்பான். ஞானம்-காட்சி. ஞேயம்-காணப்படுபொருள். இவை திரிபுடி என்னப்படும்.

சிவஞானத்தால் ஞாதுரு ஞானஞேயங்கள் பொருந்தாவண்ணம் சிவத்தோடு இரண்டறக்கலத்தலாகிய சித்தாத்துவிதநிலை ஈண்டு விவரிக்கப்பட்டது. உதிப்பு ஈறு-பிறப்பு இறப்பு. முத்துலை-தண்ணீர் இறைக்கும் மூன்று துலை. கண்படை-நித்திரை. உளைப்பார்-அழைப்பார். தகர்-ஆட்டுக்கடா. (பக். ௭, ௮௦—௯௩) அரட்டு-பயம். சகலம் கேவலம் சுத்தம் என்ற மூன்று அவத்தைகளை நெஞ்சுவிடுதூது போற்றிப்பஃறொடை முதலியவைகளிற் காண்க. (பக். ௮, ௯௪—௧௦௭) ஆறுவகைச் சமயம் சித்தியார் பரபக்ஷம் முதலிய சித்தாந்த நூல்களுட் காண்க. மடங்கல்-சிங்கம். கஞ்சாசனம்-தாமரையாகிய இடம், மூலாதாரம்முதலியவை. அரவு குண்டலிப்பாம்பு. அத்தாணி-கொலுமண்டபம். (பக். ௯, ௧௦௮—௧௨௧) இரணியம்-பொன். துரியம்-சாக்கிராதி அவத்தைகள் ஐந்தனுள் ஒன்று. (பக். ௧௦, ௧௨௨—௧௩௫) ௧௨௭-வது கண்ணியில் தருமையே அனுக்கிரகஸ்தானம் என்பதைக் குறிக்கின்றார். ௧௨௯-௧௩௮ கண்ணிகள் இவ்வாதீனத்துத் தசாங்கங்களைக் குறிக்கின்றன. மந்திரம்முதலிய ஆறு அத்துவாக்களைச் சித்தியாருட் காண்க. ஐங்கோசம் முன்னர்க்காண்க.

(பக். கக, கநக—கசக) செங்கோல்-திருவருட்செங்கோல்: மாதவர்-உண்மைநெறி விளக்கத்திற்கண்ட தத்துவரூபம் முதலிய தசகாரியங்களை உணர்ந்த தம்பிரான்மார்கள். பஞ்சகலை-நிவர்த்திமுதல் சாந்தியதீதம்வரை உள்ள கலைகள் ஐந்து. (பக். கஉ, கருo—க்ருஅ) கழுதுபிடியுண்டபேர்-இவர் தன்மையைத் திருவுந்தியார் திருக்களிற்றுப்படியாருட்காண்க. இன்பம் அனுபவம்-முத்தி நிச்சயத்தை ஆராய்ந்து அனுபவிக்கும் சிவபோகம்.

தமிழ்மணங் கமழுங் கமலையம் பதிவாழ்
ஞானசம் பந்தனை வணங்கி
லீனசம் பந்த மில்லைவீ டெளிதே.

பூதியும் புனிதவஞ் செழுத்தும் பொலிக.

# பிரதிபேதம்.



| கண்ணி. | பாடம். | பேதம். |
| --- | --- | --- |
| க0கூ | கொப்புழுபகிடத்து | ... கொப்பு ளகலிடத்து |
| ககக | நீங்கி | ... நீக்கி |
| ககஉ | விண்டு கழித்தேறு | ... வென்றுகளித் தேறுதற்கு |
| ககங | மோடியபோ தேறி | ... மொட்டியபோ தேறி |
| ககச | பகட்டுப் | ... பகட்டும் |
| ககரு | பேய்க்கணங்கடுன்னாத் | ... பேயக்கணங் கண்டுன்னாத் |
| ,, | கடந்தசுகமேடை | ... கடந்ததூமேடை |
| ககஎ | வெளியின்வரச் | ... வெளியினவாச் |
| ககஅ | வெய்ப்பின் வருவைப்புப் | ... வெய்ப்பினிலே வந்தவைப்புப் |
| கககூ | மருடன்னை யுதிப்பித்து | ... மருட்டன்னை நினைப்பித்து |
| ,, | மறப்பித்து | ... மறைப்பித்து |
| கஉக | மறந தின்பந் | ... மறிந் தின்பந் |
| ,, | உதவுந் தாய் | ... உதவு தயா |
| கஉங | பிடி தது முத்தந் | ... பிடித்தமுதந் |
| கஉசா | வண்ணமற்ற | ... வண்மையுற்ற |
| கஙக | டாறு வகை | ... டாறத்து வாக் |
| ,, | வாழவைத்த | ... வாழவைக்கு |
| கஙங | பங்கயன்சேர் பூமினைவகுந்த | ... பங்கயஞ்சேர் பூமிமுத னை |
| கசரு | சேர்ந்து, வளை | ... சோர்ந்து, வலை |
| கருங | வேலொறிய | ... வேளொறிய |
| கருஎ | வெறியாக்கி | ... வெளியாக்கி |
| கருஅ | கையிற்றுவென்றதனை | ... கையிலரு ளென்றதனை. |





உ

கடவுள் துணை.

# விக்கிரமசோழனுலா.

க. சீர்தந்த தாமரையாள் கேள்வன் றிருவுருவக்
கார்தந்த வுந்திக் கமலத்துப்—பார்தந்த

உ. ஆதிக் கடவுட் டிசைமுகனு மாங்கவன்றன்
காதற் குலமைந்தன் காசிபனு—மேதக்க

௩. மையறு காட்சி மரீசியு மண்டிலஞ்
செய்ய தனியாழித் தேரோனு—மையல்கூர்

ச. சிந்தனை யாளிற்கு முற்றத் திருத்தேரின்
மைந்தனை யூர்ந்த மனுவோனும்—பைந்தடத்

ரு. தாடு துறையி லடுபுலியும் புல்வாயுங்
கூடநீ ருட்டிய கொற்றவனும்—நீடிய

சா. மாக விமானந் தனியூர்ந்த மன்னவனும்
போக புரிபுரந்த பூபதியும்—யாகத்துக்

எ. கூற வரிய மனுக்கொணர்ந்து கூற்றுக்குத்
தேற வழக்குரைத்த செம்பியனு—மாறழிந்

அ. தோடி மறலி யொளிப்ப முதுமக்கட்
சாடி வகுத்த தராபதியுங்—கூடார்தந்

கூ. தூங்கு மெயிலெறிந்த சோழனு மேல்கடலில்
வீங்குநீர் கீழ்கடலில் விட்டோனு—மாங்குப்

க0. பிலமதனிற் புக்குத்தன் பேரொளியா னாகர்
குலமகளைக் கைப்பிடித்த கோவு—முலகறியக்

கக. காக்குஞ் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து
தூக்குந் துலைபுக்க தூயோனு—மேக்குயரக்

---

ச. "மைந்தனையூர்ந்தமறவோனும்"—எனவும் பிரதிபேதம்.
சா. "பூபதியு—மாகத்து"—பி - ம்.

கஉ. கொள்ளுங் குடகக் குவடூ டறுத்திழியத்
தள்ளுந் திரைப்பொன்னி தந்தோனுந்—தெள்ளருவிச்

கங. சென்னிப் புலியே யிருத்திக் கிரிதிரித்துப்
பொன்னிக் கரைகண்ட பூபதியு—மின்னருளின்

கச. மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திவனு—மீதெலா

கரு. மெண்கொண்ட தொண்ணூற்றின் மேலு மிருமூன்று
புண்கொண்ட வென்றிப் புரவலனுங்—கண்கொண்ட

கசா. கோதிலாத் தேறல் குனிக்குந் திருமன்றங்
காதலாற் பொன்வேய்ந்த காவலனுந்—தூதற்காப்

கஎ. பண்டு பகலொன்றி லீரொன் பதுசுரமுங்
கொண்டு மலைநாடு கொண்டோனுந்—தண்டேவிக்

கஅ. கங்கா நதியுங் கடாரமுங் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியனும்—வங்கத்தை

ககூ. முற்று முரணடக்கி மும்மடிபோய்க் கல்யாணி
செற்ற தனியாண்மைச் சேவகனும்—பற்றலரை

உ0. வெப்பத் தடுகளத்து வேழங்க ளாயிரமுங்
கொப்பத் தொருகளிற்ருற் கொண்டோனு—மப்பழநூல்

உக. பாடரவத் தென்னரங்க மேயாற்குப் பன்மணியா
லாடரவப் பாய லமைத்தோனுங்—கூடலார்

உஉ. சங்கமத்துக் கொள்ளுந் தனிப்பரணிக் கெண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனு—மங்கவன்பின்

உங. காவல் புரிந்தவனி காத்தோனு மென்றிவர்கள்
பூவலய முற்றும் புரந்ததற்பின்—மேவலர்தஞ்

உச. சேலைத் துரந்து சிலையைத் தடிந்திருகாற்
சாலைக் களமறுத்த தண்டினுன்—மேலைக

உரு. கடல்கொண்டு கொங்கணமுங் கன்னடமுங் கைக்கொண்
டடல்கொண்ட மாராட் டரசை—யுடலை

உசா. யிறக்கி வடவரையே யெல்லையாத் தொல்லை
மறக்கலியுஞ் சுங்கமு மாற்றி—யறத்திகிரி

---

கஅ. "கைவாக், கங்கா புரிபுரந்த கற்பகமும்"—எனவும் பி-ம்.
உரு. "அடல்கொண் டமரா டரசை"—எனவும் பி-ம்.

௨௭. வாரித் திகிரி வலமாக வந்தளிக்கு
மாரிற் பொலிதோ ளபயற்குப் — பாரிளங்கத்

௨௮. தோன்றியதோன் விக்கிரம சோழன் றுடைத்தும்பை
மூன்று முரச முகின்முழங்க — நோன்றலைய

௨௯. மும்மைப் புவனம் புரக்க முடிகவித்துச்
செம்மைத் தனிக்கோ றிசையளப்பத் — தம்முன்

௩௦. விடவுட் படுத்த விழுக்கவிகை யெட்டுக்
கடவுட் களிறு கவிப்பச் — சுடர்சேர்

௩௧. இணைத்தார் மகுட மிறக்கி யரசர்
துணைத்தா ளபிடேகஞ் சூட்டப் — பணைத்தேறு

௩௨. நீராழி யேழு நிலவாழி யேழுந்தன்
போராழி யொன்றாற் பொதுநீக்கிச் — சீராரு

௩௩. மேய திகிரி வரிமே கலையல்குற்
றாய நிலமடந்தை தோள்களினுஞ் — சாயலி

௩௪. ணேது முலகங்க ளேழுந் தனித்துடைய
கோதில் குலமங்கை கொங்கையினு — மோதில்

௩௫. நிறைகின்ற செல்வி நெடுங்கண் களினு
முறைகின்ற நாளி லொருநா — ளறைகழற்காற்

௩௬. றென்னர் திறையளந்த முத்திற் சிலபூண்டு
தென்னர் மலையாரச் சேறணிந்து — தென்னர்

௩௭. வரவிட்ட தென்ற லடிவருட வாட்கண்
பொரவிட்ட பேராயம் போற்ற — விரவிட்ட

௩௮. நித்திலப் பந்தர்க்கீழ் நீணிலாப் பாயன்மேற்
றொத்தலர் மாலைத் துணைத்தோளு — மைத்தடங்

௩௯. கண்ணு முலையும் பெரிய களியன்ன
மெண்ணு முலகங்க ளேழுடைய — பெண்ணணங்கு

௪௦. பெய்த மலரோதிப் பெண்சக்ர வர்த்தியுட
னெய்திய பள்ளி யினிதெழுந்து — பொய்யாத

௪௧. பொன்னிப் புதுமஞ் சனமாடிப் பூசுரர்கைக்
கன்னித் தளிரறுகின் காப்பணிந்து — முன்னை

௨௯. "முடிசூடிச்" — பி-ம்.

௪௨. மறைக்கொழுந்தை வெள்ளி மலைக்கொழுந்தை மௌலிப்
பிறைக்கொழுந்தை வைத்த பிரானைக்—கறைக்களத்துச்

௪௩. செக்கர்ப் பனிவிசும்பைத் தெய்வத் தனிச்சுடரை
முக்கட் கனியை முடிவணங்கி—மிக்குயர்ந்த

௪௪. தானத் தொழின்முடித்துச் சாத்துந் தகைமையன
மானக் கலன்கள் வரவருளித்—தேன்மொய்த்துச்

௪௫. சூழு மலர்முகத்துச் சொன்மா மகளுடனே
தாழு மகரக் குழைதயங்க—வாழுந்

௪௬. தடமுலைப் பார்மடந்தை தன்னுடனே தோளிற்
சுடர்மணிக் கேயூரஞ் சூழப்—படருந்

௪௭. தணிப்பில் பெருங்கீர்த்தித் தையலுடனே
மணிக்கடகங் கையில் வயங்கப்—பிணிப்பின்

௪௮. முயங்குந் திருவுடனே முந்நீர் கொடுத்த
வயங்கு மணிமார்பின் மல்க—வுயங்கா

௪௯. அருங்கொற்ற மாதர்க்கு மணங்கி னுடனே
மருங்கிற் றிருவுடைவாள் வாய்ப்பப்—பொருந்திய

௫0. வண்ணற் படிவத் தரும்பே ரணியணிந்து
வண்ணத் தளவில் வனப்பமைத்துக்—கண்ணுதலோன்

௫௧. காமன் சிலைவணங்க வாங்கிய கட்டழகு
தாம முடிவணங்கத் தந்தனைய—காமருபூங்

௫௨. கோலத் தொடுபெயர்ந்து கோயிற் புறநின்று
காலத் ததிருங் கடாக்களிறு—ஞாலத்துத்

௫௩. தானே முழங்குவ தன்றித் தனக்கெதிர
வானே முழங்கினுமவ் வான்றடவி—வானிற்

௫௪. கணியு மருப்பு மடற்கையு மின்மை
தணியும் யமராச தண்டந்—தணியாப்

௫௫. பரிய பெருங்கோ டிணைத்துப் பணைத்தற்
கரிய தொருதானே யாகிக்—கரிய

௫௬. மலைக்கோ டனைத்து மடித்திடியக் குத்துங்
கொலைக்கோட்டு வெங்கால கோபத்—தலைத்தோட

---

௪௮. "முயங்கா"—பி.ம்.

ருஎ. ஊறு மதந்தனதே யாக வுலகத்து
வேறு மதம்பொறா வேகத்தாற்—கூறொன்றத்

ருஅ. தாங்கிப் பொறையாற்றுந் தத்தம் பிடர்நின்றும்
வாங்கிப் பொதுநீக்கி மண்முழுது—மோங்கிய

ருகூ. கொற்றப் புயமிரண்டாற் கோமா னகளங்கன்
முற்றப் பரித்ததற்பின் முன்புதா—முற்ற

சூ0. வருத்த மறமறந்து மாதிரத்து வேழம்
பருத்த கடாந்திறந்து பாயப்—பெருக்கத்

சூக. துவற்று மதுரச் சுவடுபிடித் தோடி
யவற்றி னபரங்கண் டாறி—யிவற்றை

சூஉ. அளித்தன னெங்கோமா னுதலா லின்று
களித்தன வென்றுவக்குங் காற்று—வெளித்திழிய

சூ௩. வேற்றுப் புலத்தை மிதித்துக் கொதித்தமரி
லேற்றுப் பொருமன்ன ரின்னுயிரை—கூற்றுக்

சூச. கருத்து மயிரா வதநின் றதனை
யிருத்தும் பிடிபடியா வேறித்—திருத்தக்க

சூரு. கொற்றக் கவிகை நிழற்றக் குளிர்ந்திரட்டைக்
கற்றைக் கவரிகளின் காலசைப்ப—வொற்றை

சூசூ. வலம்புரி யூத வளைக்குல மார்ப்பச்
சிலம்பு முரசஞ் சிலம்பப்—புலம்பெயர்ந்து

சூஎ. வாட்படை கொட்ப மறமன் னவர்நெருங்கக்
கோட்புலிக் கொற்றக் கொடியோங்கச்—சேட்புலத்துத்

சூஅ. தென்னரு மாளுவருஞ் சிங்களருந் தேற்றாதகை
மன்னருந் தோற்க மலைநாடு—முன்னங்

சூகூ. குலையப் பொருதொருநாட் கொண்ட பரணி
மலையத் தருந்தொண்டை மானும்—பலர்முடிமே

எ0. லார்க்குங் கழற்கா லனகன் றனதவையுட்
பார்க்குமதி மந்திர பாலகரிற்—போர்க்குத்

எக. தொடுக்குங் கமழ்தும்பை தூசிநெடுஞ் சூழ்க்
கொடுத்த புகழ்முனையர் கோனு—முடிக்கரையுங்

---

சூஅ. "மலைநாட்டார்"—பி-ம்.

௭௨. கங்கரையு மாராட் டரையுங் கலிங்கரையுங்
கொங்கரையு மேனைக் குடகரையுந்—தங்கோன்

௭௩. முனியும் பொழுது முரிபுருவத் தோடு
குனியுஞ் சிலைச்சோழ கோனுஞ்—சனபதிதன்

௭௪. றேறுங் கவசமுஞ் சுற்றமுங் கொற்றப்போர்
வாளுமடியு மதியமைச்சு—நாளுமா

௭௫. மஞ்சைக் கிழித்து வளரும் பெரும்புரிசைக்
கஞ்சத் திருமறையோன் கண்ணனும்—வெஞ்சமத்துப்

௭௬. புல்லாத மன்னர் புலாலுடம்பைப் பேய்வாங்க
வொல்லாத கூற்ற முயிர்வாங்க—புல்லார்ந்த

௭௭. தாங்கு மடமகளிர் தத்தங் குழைவாங்க
வாங்கும் வரிசிலைக்கை வாணனும்—வேங்கையினுங்

௭௮. கூடார் விழிஞத்துங் கொல்லத்துங் கொங்கத்து
மோடா விரட்டத்து மொட்டத்து—நாடா

௭௯. தடியெடுத்து வெவ்வே றரசிரிய வீரக்
கொடியெடுத்த காலிங்கர் கோனுங்—கடியரணச்

௮0. செம்பொற் பதணச் செறியிஞ்சிச் செஞ்சியர்கோன்
கம்பக் களியானைக் காடவனும்—வெம்பிக

௮௧. கலக்கிய வஞ்சக் கலியதனைப் பாரில்
விலக்கிய வேணாடர் வேந்துந்—தலைத்தருமம்

௮௨. வாரிக் குமரிமுதன் மந்தா கினியளவும்
பாரித் தவனனந்த பாலனும்—பேரமரின்

௮௩. முட்டிய பொருநர் வடமண்ணை மும்மதிலு
மட்டித்த மாலயானை வத்தவனு—மட்டையெழுக

௮௪. காதிக் கருநாடர் கட்டரணங் கட்டழித்த
சேதித் திருநாடர் சேவகனும்—பூதலத்து

௮௫. முட்டிய தெவ்வர் சடைகட்ட மொய்கழல
கட்டிய காராளை காவலனு—மொட்டிய

௮௬. மான வரச ரிரிய வடகலிங்கத்
தானை துணித்த தவதிகனு—மீனவர்தங்

---

௭௫. "பொழிற்புரிசை"—பி-ம்.
௮௪. "காதித்திருநாடர்"—பி-ம்.

அஎ. கோட்டாறுங் கொல்லமுங் கொண்ட குடைநுளம்பன்
வாட்டார் மதயானை வல்லவனு—போட்டரணக்

அஅ. கொங்கைக் குலைத்துக் குடகக் குவடொடித்த
செங்கைக் களிற்றுத் திகத்தனு—மங்கத்து

அகூ. வல்லவனுங் கோசலனு மாகதனு மாளுவனும்
வில்லவனுங் கேரளனு மீனவனும்—பல்லவனு

கூ0. மென்னும் பெரும்போ ரிகல்வேந்தர் மண்டலிகர்
முன்னு மிருமருங்கு மொய்த்தீண்டப்—பன்மணிச்

கூக. சோதி வயிர மடர்க்குஞ் சுடர்க்குழையார்
வீதி குறுகுதலு மேலொருநாண்—மாதவத்தோன்

கூஉ. சார்ந்த பொழுதனங்கன் றன்னை யறிவித்துப்
பூந்துவரை யந்தப் புரம்போன்று—மேந்திப்

கூ௩. பரக்குங் கலையல்குற் பாவையரே யானை
புரக்குந் திருநாடு போன்றும்—வரக்கருதா

கூச. வேனை முனிக்குறும்பு கொல்ல விகன்மாரன்
சேனை திரண்ட திரள்போன்றுங்—கானலங்

கூரு. கண்டன் மணற்குன்றத் தன்னக் கணம்போன்றுங்
கொண்டலின் மின்னுக் குழாம்போன்று—மண்டு

கூசு. திரைதோறுந் தோன்றுந் திருக்குழாம் போன்று
வரைதோறுஞ் சேர்மயில்கள் போன்றும்—விரவினராய்

கூஎ. இந்து நுதல்வெயர்ப்ப வெங்கணுங் கண்பரப்பிச்
சிந்தை பரப்பித் தெருவெங்கும்—வந்தீண்டி

கூஅ. உத்தி சுடர வொளிமணிச் சூட்டெறிப்பப்
பத்தி வயிரம பரந்தெறிப்ப—முத்தி

கூகூ. னிணங்கு மமுத கலசங்க ளேந்தி
வணங்கு தலையினராய் வந்து—கணங்கொண்டு

க00 பார்க்குங் கொடுநோக்கு நஞ்சுறைப்பக் கிஞ்சுகவாய்
கூர்க்கு மெயிறுவெறுங் கோளிழைப்ப—வேர்க்க

க0க. வரைகொ ணெடுமாடக் கீணிலையின் மல்கி
யுரக வரமகளி ரொப்பார்—விரல்கவரும்

---

க00. "பெறுங்கோளிழைப்ப"—பி-ம்.

௧0௨. வீணையும் யாழுங் குழலும் விசிமுழவும்
பாணி பெயர்ப்பப் பதம்பெயர்த்துச்—சேணுயர்

௧0௩. மஞ்சிவரும் வெண்பளிக்கு மாடத் திடைநிலையின்
விஞ்சையர் மாத ரெனமிடைவா—ரஞ்சனக்

௧0௪. கண்ணிற் சிறிது மிமையாத காட்சியு
மண்ணிற் பொருந்தா மலரடியுந்—தண்ணென்ற

௧0௫. வாடா நறுஞ்செவ்வி மாலையுங் கொண்டமுரு
கீடா நிலாமுற்ற மேனிலையிற்—கூடி

௧0௬. யுருவி னொளியி னுணர்வி னுரையிற்
பொருவி லரமகளிர் போல்வார்—அருகணைந்து

௧0௭. சீரள வில்லாத் திருத்தோ ளயன்படைத்த
பாரள வல்ல பணைப்பென்பார்—பாருமின்

௧0அ. செய்ய வொருதிருவே யாளுஞ் சிறுமைத்தோ
வைய முடையபிரான் மார்பென்பார்—கையிரண்டே

௧0௯. ஆனபோ தந்த முருகவே ளல்லனிவன்
வேனில்வேள் கண்டீ ரெனமெலிவார்—யானென்று

௧௧0. மெண்ணுக் கிசைய வருமே யிவனென்பார்
கண்ணிற் கருணைக் கடலென்பார்—மண்ணளிக்கும்

௧௧௧. ஆதி மனுகுலமிவ் வண்ணலான் மேம்படுகை
பாதியே யன்று லெனப்பகர்வார்—தாதெடுத்த

௧௧௨. கொங்கை பசப்பார்தங் கோல்வளை காப்பார்போற்
செங்கை குவிப்பார் சிலர்செறிய—அங்கொருத்தி

## பேதை.

௧௧௩. வந்து பிறந்து வளரு மிளந்திங்கழுக்
கொந்து முகிழாக் கொழுங்கொழுந்து—பைந்தழைத்

௧௧௪. தோகை தொடாமஞ்ஞை சூடுண்டு தோற்றவன்மேல்
வாகை புனைய வளர்கரும்பு—கோகிலத்தின்

௧௧௫. பிள்ளை யிளவன்னப் பேடை பிறந்தணிய
கிள்ளை பவளங் கிளைத்தகிளை—கள்ளாந்

௧0௨. "பதம்பெயர்த்து—நீணிலா"—பி-ம்.
௧௧௪. "தோகைதொடாமஞ்ஞை"—பி-ம்.

௧௧௬. தெரியாப் பெருங்கட் சிறுதேறல் தாயர்
பிரியாப் பருவத்துப் பேதை—பரிவோடு

௧௧௭. பாவையு மானு மயிலும் பசுங்கிளியும்
பூவையு மன்னமும் பின்போதக்—காவலன்

௧௧௮. பொன்னிப் புகார்முத்தி னம்மனையுந் தென்னாகை
நன்னித் திலத்தி னகைக்கழங்குஞ்—சென்னிதன்

௧௧௯. கொற்கைக் குளிர்முத்தின் கோலமணி வல்சியுங்
கற்கைக்கு வேண்டுவன கைப்பற்றிப்—பொற்கொடியார்

௧௨0. வீதி புகுந்து விளையாடு மெல்லைக்கண்
ஆதி யுகம்வந் தடிக்கொள்ள—மேதினிமே

௧௨௧. லூன்று கலிகடிந்த வுத்துங்க துங்கன்றன்
மூன்று முரச முழங்குதலும்—வான்றுணைத்

௧௨௨. தாயர் வரவந்து தாயர் தொழத்தொழுது
தாயர் மொழிந்தனவே தான்மொழிந்தாள்—சேயோன்

௧௨௩. படியின் மதியும் பகலவனுந் தோற்கு
முடியி லொருகாலு மூளா—வடிவின்

௧௨௪. மகிழ்ந்து மலராண் மலர்க்கண்ணு நெஞ்சு
நெகிழ்ந்த திருநோக்கி னேரா—முகிழ்ந்து

௧௨௫. சிரிக்குந் திருப்பவளச் சேயொளியூ டாடா
விரிக்குந் திருநிலவின் வீழா—பரிக்கும்

௧௨௬. உலகம் பரவுந் திருப்புருவத் தோடா
திலக முகாம்புயத்திற் சேரா—பலவுந்

௧௨௭. திசையை நெருக்குந் திருத்தோளிற் செல்லா
விசையுந் திருமார்பத் தெய்தா—வசையிலாக்

௧௨௮. கைம்மலரிற் போகா வடிமலரிற் கண்ணுறு
மெய்ம்மலர்ப் பேரொளியின் மீதூரா—வம்மகள்

௧௨௯. கண்ணு மனமுங் கழுநீர்க் குலமுழுது
நண்ணுந் தொடையன்மே லூட்செய்ய—வுண்ணெகிழா

---

௧௧௭. "மானும் மயிலும்"—பி - ம்.

௧௧௯. "முத்த வல்சியுஞ் சோறடவு" எனவும் "பொற்றொடியார்" எனவும் பி - ம்.

௧௨௧. "உத்துங்கசோழன்"—பி - ம்.

௧௩௦. வம்பின்க ளன்னைமீர் மாலை யிதுவாங்கித்
தம்பின்க ளென்றுரைப்பத் தாயரு—மம்மே

௧௩௧. பெருமானை யஞ்சாதே பெண்ணமுதே யாமே
திருமாலை தாவென்று செல்வேந்—திருமாலை

௧௩௨. யாங்கொள்ளும் வண்ண மெளிதோ வரிதென்னத்
தேங்கொள்ளு மின்சொற் சிறியாளு—மாங்குத்தன்

௧௩௩. மார்புத்துக் கண்ணினீர் வாரப் பிறர்கொள்ளு
மார்வத்துக் கின்றே யடியிட்டாள்—சேர

௧௩௪. விருத்தி மணப்பேச மிளையோரை யூட்டு
மருத்தி நடுவே யயர்த்தாள்—ஒருத்தி

## பெதும்பை.

௧௩௫. மழலை தனது கிளிக்களித்து வாய்த்த
குழலி னிசைகவர்ந்து கொண்டாள்—நிழல்விரவு

௧௩௬. முன்னர் நகைதனது முல்லை கொளமுத்தின்
பின்னர் நகைகொண்ட பெற்றியாள்—கன்னி

௧௩௭. மடநோக்கந் தான்வளர்த்த மானுக்கு விட்டு
விடநோக்க வேலிரண்டு கொண்டாள்—சுடர்நோக்குந்

௧௩௮. தானுடைய மெய்ந்நடக்கந் தன்மா தவிக்களித்து
வானுடைய மின்னுடக்கம் வாங்கினாள்—பூநறும்

௧௩௯. பாவைதன் பைங்குர வேந்தப் பசுங்கிளியும்
பூவையு மேந்தும் பொலிவினாள்—மேவு

௧௪௦. மடநடை யன்னப் பெடைபெறக் கன்னிப்
பிடிநடை பெற்றுப் பெயர்வாள்—சுடர்கனகக்

௧௪௧. கொத்துக் குயின்ற கொடிப்பவள பந்தத்தின்
முத்துப் பொதியுச்சி முச்சியா—ளெத்திறத்தும்

௧௪௨. வீரவேள் போல்வாரை வீட்டி விழுத்தவர்மேன்
மாரவேள் கண்சிவப்ப வாய்சிவப்பாள்—நேரொத்த

---

௧௩௪. "இளையோரை யூட்டி யருத்தி யறவே"—பி - ம்.
௧௩௫. "கொள்வாள்"—பி - ம்.
௧௩௮. "பூநாறும்"—பி - ம்.

கசங. கோங்க முகையனைய கொங்கையா டன்கழுத்தாற்
பூங்கமுகை யிப்போது பொற்பழிப்பாள்—பாங்கியருந்

கசச. தாயரும் போற்றுமே தானே துயிலெழுந்து
பாயல் புடைபெயர்ந்து பையச்சென்—றியாயே

கசரு. தளரு மிடையொதுங்கத் தாழுங் குழைத்தாய்
வளரு மொருகுமரி வல்லி—கிளருங்

கசசு. கொழுந்து மளவிறந்த கொந்துங் கவினி
யெழுந்து கிளைகவிப்ப வேறித்—தொழுந்தகைய

கசஎ. கொங்குடைய பொன்னடருஞ் சென்னிக் கொழுங்கோங்கின்
பங்குடைய ஏறிப் பணையணைந்—தங்குடைய

கசஅ. வண்டு முரல மணநாற வைகுவது
கண்டு மகிழ்ந்தேன் கனவிலெனக்—கொண்டு

கசகூ. வருக வருக மடக்கிள்ளை முத்தந்
தருக தருகவெனத் தாயர்—பெருக

கருo. விரும்பினர் புல்லி விரைய முலைவந்
தரும்பின வாகத் தணங்கே—பெரும்புயங்கள்

கருக. புல்லி விடாத புதுவதுவை சென்னியுடன்
வல்லி பெறுதி யெனவழுத்து—மெல்லை

கருஉ. யரச னபய னகளங்க னெங்கோன்
புரசை மதவரைமேற் போத—முரசந்

கருங. தழங்கு மறுகிற் றமரோடு மோடி
முழங்கு முகின்மாட முன்றிற்—கொழுங்கயற்கட்

கருச. பொன்னென வெல்லா மிழகும் புனைவதொரு
மின்னென வந்து வெளிப்பட்டு—மன்னருயி

கருரு. ருண்டாற் றியவேங்கை வைக்க வொருதிருக்கைச்
செண்டாற் றிரிதிரித்த சேவகனைத்—தண்டாத

கருசு. வேகங் கெடக்கலிவாய் வீழ்ந்தாற்றும் பார்மகளைச்
சோகங் கெடுத்தணைத்த தோளானை—யாகத்துக்

---

கசசு. "கிளைகவிப்பவேறி"—பி - ம்.

கசகூ. "தாயர்—விரவி"—பி - ம்.

கருசு "சோகக்கெடுக்கெடுக்க"—பி - ம்.

௧௫௭. கொங்கை பிரியாத வீரேடுங் கோகனக
மங்கை பிரியாத மார்பனை—யங்கமலக்

௧௫௮. கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலைத்—தையலுங்

௧௫௯. கண்டகண் வாங்காள் தொழுமுகிழ்த்த கைவிடாள்
மண்டு மனமீட்கு மாறறியாள்—பண்டறியாக்

௧௬௦. காமங் கலக்கக் கலங்கிக் குழல்சரியத்
தாமஞ் சரியத் தனிநின்றாள்—நாமவேற்

௧௬௧. சேரனு மீனவனுஞ் சேவிப்பச் செம்பியரில்
வீரனு மவ்வெல்லை விட்டகன்றான்—மாரனுந்

௧௬௨. தக்குத் தகாதானை யெய்து தரைப்படுத்துப்
புக்குத் தொடைமடக்கிப் போயினான்—மைக்குழல்

மங்கை.

௧௬௩. மங்கைப் பருவத் தொருத்தி மலர்பொதுளுங்
கங்கைப் புளினக் களியன்ன—மெங்கோனை

௧௬௪. மன்னனை மன்னர் பிரானை வரோதயனைத்
தென்னனை வானவனைச் செம்பியனை—முன்னொருநாட்

௧௬௫. கண்ட பெதும்பைப் பருவத்தே தன்கருத்தாற்
கொண்ட பரிவு கடைக்கூட்டப்—புண்டரிகச்

௧௬௬. செய்ய வடிமுதலாச் செம்பொன் முடியளவு
மைய லகல மனத்திழைத்துக்—கையினாற்

௧௬௭. றீட்டுங் கிழியிற் பகற்கண் டிரவெல்லாங்
காட்டுங் கனவு தரக்கண்டு—நாட்டங்கொண்

௧௬௮. டியாதொன்றுங் காணா திருப்பாள் பொருகளிற்றுத்
தாதொன் றுந் தொங்கற் சயதுங்கன்—வீதி

௧௬௯. வருகின்றா னென்று மணியணிகள் யாவுந்
தருகென்றாள் வாங்கித் தரித்தாள்—விரிகோதை

௧௭௦. சூடினாள் பைம்பொற் றுகிலுடுத்தாள் சந்தனச்சே
றாடினா டன்பே ரணியணிந்தாள்—சேடியர்

௧௭௧. காட்டும் படிமக் கலத்துக் கமலத்தை
யோட்டும் வதனத் தொளிமலர்ந்து—கேட்டு

௧௭௨. விடைபோ மனங்கன்போல் வேல்விழுகூடாமுமை
படைபோய் வருவனபோற் பக்கங்—கடைபோய்

௧௭௩. மறித்து மதர்மதர்த்து வார்கடிப்பு வீக்கி
யெறிக்குங் குழைக்காதிற் கேற்று—நெறிக்கு

௧௭௪. மளக முதலாக வைம்பாற் படுத்த
வளர்கருங் கூந்தன் மலிந்துங்—கிளர

௧௭௫. வரியன நித்திலத்தி னம்பொற் றொடித்தோள்
பரியன காம்பிற் பணைத்துந்—தெரியற்

௧௭௬. சுவடு படுகளபத் தொய்யில்சூழ் கொங்கைக்
குவடு படவெழுச்சி கொண்டுந்—திவடர

௧௭௭. மூந்துங் கலையல்குன் மூரித் தடமகன்று
நொந்து மருங்கு லுடங்கியும்—வந்து

௧௭௮. மிடையும் புதுவனப்பு விண்ணோரும் வீழ
வடையுந் தனதுருக்கண் டஞ்சிக்—கொடையனகன்

௧௭௯. பண்டறியு முன்னைப் பருவத் துருவத்துக்
கண்டறியு மவ்வடிவு காண்கிலேன்—பண்டறியு

௧௮0. முன்னை வடிவு மிழந்தேன் முகநோக்கி
யென்னை யறிகலன்யா னென்செய்கேன்—றன்னை

௧௮௧. வணங்கி வருவ தறிவ னெனவந்
திணங்கு மகளி ரிடைநின்—றணங்கு

௧௮௨. மிறைவ னகளங்க னெங்கோன் குமரித்
துறைவ னிருபகுல துங்கன்—முறைமையாற்

௧௮௩. காக்குங் கடல்கடைந்த கைமலரு முந்திமலர்
பூக்கு முலகளந்த பொற்கழலு—நோக்குந்

௧௮௪. திருக்கொள்ளு மார்பமுந் தெவ்வேந்த ரெல்லாம்
வெருக்கொள்ளு மூரித்தோள் வெற்பு—முருக்கு

௧௮௫. மகரக் குழைக்காது மாதரார் மாமை
நுகரப் புடைபெயரு நோக்குந்—துகிரொளியை

௧௮௬. வெளவிய கோல மணிவாயு மெப்பொழுதுஞ்
செவ்வி யழியாத் திருமுகமு—மெவ்வுருவு

---

௧௭௪. "மலிந்து—மிளிர"—பி - ம்.

௧௮௭. மாறு படாவண்ண மண்ணல் படிவத்து
வேறு படுவனப்பு மெய்விரும்பித்—தேறும்

௧௮௮. பிறையாம் பருவத்துப் பேருவகை யாம்பல்
நிறையா மதிக்கு நெகிழ்ந்தாங்—கிறைவனைக்

௧௮௯. கண்டு மனமு முயிருங் களிப்பளவிற்
கொண்டு பெயர்ந்தது கொல்யானை—பண்டு

௧௯0. நனவு கிழியிற் பகற்கண்டு நல்ல
கனவு தராவிரவிற் கண்டு—மனமகிழ்வாள்

௧௯௧. தீட்ட முடியாத செவ்வி குறிக்கொள்ளும்
நாட்ட முறங்கா மையுநல்க—மீட்டுப்

௧௯௨. பெயர்ந்தா டமர்தம் பெருந்தோள் களில்வீழ்ந்
தயர்ந்தா ளவணிலையீ தப்பாற்—சயந்தொலைய

## மடந்தை.

௧௯௩. வெந்து வடிவிழந்த காமன் விழிச்சிவப்பு
வந்து திரண்டனைய வாயினா—ளந்தமி

௧௯௪. லோலக் கடலேழு மொன்றா யுலகொடுக்குங்
காலக் கடலனைய கட்கடையாள்—ஞாலத்தை

௧௯௫. வீட்டி வினைமுடிக்க வெங்கால தூதுவர்கள்
கோட்டி யிருக்குங் குவிமுலையாள்—நாட்ட

௧௯௬. வடிவின் மருங்குலாண் மாரனைப்போன் மேலோர்
முடிவி லுணர்வை முடிப்பாள்—கடிதோடிப்

௧௯௭. போகா தொழியா திடையென்று போய்முடிய
லாகாமை கைவளரு மல்குலாள்—பாகாய

௧௯௮. சொல்லி யொருமடந்தை தோழியைத் தோள்வருந்தப்
புல்லி நிலாமுற்றம் போயேறி—வல்லிநாண்

௧௯௯. சேடிய ரொப்ப வகுத்துத் திரள்பந்து
கோடியர் கண்டிருப்பக் கொண்டாடி—யாடினா

௨00. லெண்மாலை நீகொள்வ நியாங்கொள்வ தெங்கோமான்
றன்மாலை வாங்கித் தருகென்று—மின்னனையாள்

---

௧௯௯. "கண்டுவப்பக்கொண்டாடி"—பி - ம்.

உ0க. வட்டித் தளகமும் கொங்கையும் வார்தயங்கக்
கட்டிக் கனபந்து கைப்பற்றி—யொட்டிப்

உ0உ. பொருதிறத்துச் சேடியர்தம் போர்தொலையத் தானே
யிருதிறத்துக் கந்துகமு மேந்திப்—பெரிது

உ0ங. மழுந்து நூ தானத் தவைதன்னைச் சூழ
விழுந்து மெழுந்து மிடைய—வெழுந்துவரி

உ0ச. சிந்த விசிறு திரையி னுரையூடு
வந்த வனச மகளேய்ப்ப—முந்திய

உ0ரு. செங்காந்த ளங்கை சிவக்குஞ் சிவக்குமென்
றங்காந்து தோள்வளைக ளார்ப்பெடுப்பத்—தங்க

உ0சா. னுடங்கு கொடிமருங்கு னொந்தசைந்த தென்றென்
றடங்கு கலாப மரற்றத—தொடங்கி

உ0எ. யரிந்த குரனவா யஞ்சி றடிக்குப்
பரிந்து சிலம்பு பதைப்ப—விரிந்தெழுங்

உ0அ. கைக்கோ விடைக்கோ கமல மலரடிக்கோ
மைக்கோல வோதியின்மேல் வண்டிரங்க—வக்கோதை

உ0கூ. பந்தாடி வென்று பருதி யகளங்கன்
சந்தாடு தோண்மாலை தாவென்று—பைந்துகிற்

உக0. றானை பிடித்தலைக்கும் போதிற் றனிக்குடைக்கீழ்
யானைமேல் வெண்சா மரையிரட்டச்—சேனை

உகக. மிடையப் பவளமு சித்திலமு மின்ன
வடையப் பணிலங்க ளார்ப்பப்——புடைபெயர

உகஉ. வார்ந்து மகர வயமீன் குலமுழுதும்
போந்து மறுகு புடைபிறழச்—சேர்ந்து

உகங. பதலை முழங்கப் பகடேற்றி விட்ட
மதலைகண் முன்னர் மலிய—விதலையராய்த்

உகச. தாழுந் தொழிலிற் கிளைபுரக்கத் தன்னடைந்து
வாழும் பரதர் பருங்கீண்ட—வீழுந்திக்

உகரு. கன்னியு நன்மதையுங் கங்கையுஞ் சிந்துவும்
பொன்னியுந் தோழும் புகார்விளங்க—மன்னிய

---

உ0ங. "மெழுந்து தாளத் திவைதன்னைச்"—பி - ம்.
உகச. "தன்னடைந்து வாழும்"—பி - ம்.

௨௧௬. செங்கோற் றியாக சமுத்திர னண்ணுதலுந்
தங்கோ மறுகிற் றலைப்பட்டுத்—தங்களி

௨௧௭. லொட்டிய வொட்ட முணராதே தோள்வளையுங்
கட்டிய மேகலையுங் காவாதே—கிட்டித்

௨௧௮. தொழுதா ளயர்ந்தா டுளங்கினாள் சோர்ந்தா
ளழுதா ளொருதமிய ளானாள்—பழுதிலாக்

௨௧௯. காக்குந் துகிலு மிலங்கு பொலன்கலையும்
போக்கு நிதம்பம் புனைகென்று—வீக்கு

௨௨0. மணிக்கச்சுந் தம்முடைய வான்றாசுங் கொங்கை
பணிக்கக் கடைக்கண்கள் பாரா—வணிக்கமைந்த

௨௨௧. குன்றாத நித்திலக் கோவையும் பொன்னிறத்த
பொன்றாத பட்டும் புனைகென்று—நின்று

௨௨௨. கொடுத்தன கொங்கைகளுங் கொண்டன தாமு
மடுத்தனர் தோண்மே லயர்ந்தாள்—கடுத்துக்

௨௨௩. கவரு மனங்களுடன் கைகலந்த தன்றித்
தவரு முதுகிளவித் தாய—ரவரெங்குங்

௨௨௪. கூசினார் சந்திற் பனிநீர் குழைத்திழைத்துப்
பூசினா ராலி பொழிந்தொழிந்தார்—வீசினா

௨௨௫. ரிட்டார் நிலவி லிளந்தென் றலுங்கொணர்ந்து
சுட்டார் குளிரி தொடுத்தெடுத்தார்—விட்டாரோ

௨௨௬. பள்ள மதனிற் படரும் பெரும்புனல்போ
லுள்ள முயிரை யுடன்கொண்டு—வள்ளல்பின்

௨௨௭. னோதை மறுகி லுடன்போன போக்காலிப்
பேதை நடுவே பிழைத்தொழிந்தாள்—மாதரில்

## அரிவை.

௨௨௮. வாரி படுமமுத மொப்பாண் மதுகரஞ்சூழ்
வேரி கமழ்கோதை வேறொருத்தி—மூரித்தேர்த்

௨௨௯. தட்டுஞ் சிறுகப் பெருகு மரகதத்திற்
கட்டுங் கனபொற் கலாபாரம்—பட்டுங்

---

௨௨௨. "அடுத்தன தோண்மேல்"—பி - ம்.

உருO. துகிலுங் கரப்பச் சுடர்பரப்பிக் கலைபோ
யகல்கின்ற வல்கு லரிவை—யிகலி

உருக. யொடுக்கி மருங்குகடிந் தொன்றிணைவந் தொன்று
நெருக்கிய மாமை நிரம்பித்—தருக்கி

உருஉ. யிடங்கொண்டு மின்னுக் கொடியொன் றிரண்டு
குடங்கொண்டு நின்றதெனக் கூறத்—தடங்கொண்

உருரு. டிணைத்துத் ததும்பி யிளையோர்க ணெஞ்சம
பிணைத்துத் தடமுகட்டிற் பெய்து—பணைத்துப்

உருச. பெருமை யுவமை பிறங்கொலிநீர் ஞாலத் கா
தருமை படைத்ததனைத் தன்னங்—கருமை

உருரு. யெறித்துக கடைபோ யிருபுடையு மெல்லை
குறித்துக குழையளவுங் கொண்டு—மறித்து

உருசு. மதர்த்து வரிபரந்து மைந்தர் மனங்கள்
பதைத்து விழநிறத்திற் பட்டுத—தைத்துக

உருஎ. கழுநீ ரிதழின் கவினழித்து மானின்
விழிநீர்மை வாய்த்த விழியாள்—முழுது

உருஅ. நெறிந்து கடைகுழன்று நெய்த்திருண்டு நீண்டு
செறிந்து பெருமுதுகு நோக்கி—நறாந்துணர்

உருகூ. வார்ந்து கொழுந்தெழுந்த வல்லியாய் மாந்தளிர்
சோர்ந்து மிசையசைந்த சோலையாய்ச்—சேர்ந்து

உசO. திருவிருந்த தாமரையாய்ச் சென்றடைந்த வண்டின்
பெருவிருந்து பேணுங் குழலாள்—பொருகளிற்றின்

உசக. வந்து மறுகி லொருநாண் மனுகுலத்தோன்
றந்த பெரிய தனிமைக்கட்—செந்திழக்

உசஉ. கோனை கவர்ந்தெம்மைக் கொண்டனன் வந்தெமக்குத்
தானே தரிற்றருக வெண்பனைபோற்—பூநே

உசரு. ரிணைக்கையுந் தோளு மிடுதொடிக ளேந்தா
துணைக்கண் டுயிற்றத் துயிலா—மணக்கூந்தல்

உசச. போது மறந்தும் புனையா பொலங்கச்சு
மீது படத்தரியா வெம்முலைகள்—சோதி

உசரு. யடுக்குங் கனபொற் றுகில்பேணு தல்குல்
கொடுக்குந் தெருணெஞ்சு கொள்ளா—தொடுக்குங்

உ௪௬. கருப்புச் சிலையனங்கன் கையம்பால் வீழ
நெருப்புக் குருகி நிறைபோ—யிருப்புழிப்

உ௪௭. பாடிய பூவைக்கும் யாதும் பரிவின்றி
யாடிய தோகைக்கு மன்பின்றிக்—கூடிய

உ௪௮. கிள்ளைக்குந் தம்மிற் கிளரு மிளவன்னப்
பிள்ளைக்கு மாற்றாள் பெயர்ந்துபோய்க்—கொள்ளை

உ௪௯. பயக்கு மலர்க்குரவப் பந்தர்ப் படப்பை
நயக்கு மிளமரககா நண்ணி—வயக்களிற்று

உ௫0. மன்னன் குலப்பொன்னி வைகலு மாடுதிரா
லன்னங்கா ணீரென் றழிவுற்றுஞ்—சென்னி

உ௫௧. பெருகும் புகாரடையப் பெற்றீரான் மற்றைக்
குருகுகா ளென்று தழைந்துங்—கருகிய

உ௫௨. நீலக் குயிலினங்கா ணீர்போலுஞ் சோணாட்டுச்
சோலைப் பயில்வீ ரெனத்துவண்டும்—பீலிய

உ௫௩. பேரியன் மஞ்ஞை பெறுதிராற் கொல்லியு
நேரியுஞ் சேர்வீ ரெனநெகிழ்ந்து—நேரியன்

உ௫௪. தண்டுழாய் மாலை பலகாலுந் தைவந்து
வண்டுகாள் வாழ்வீ ரெனமருண்டுந்—தொண்டிக்கோன்

உ௫௫. மன்றன மலையத்து வாளருவி தோய்ந்தன்றே
தென்றல் வருவ தெனத்திகைத்து—நின்றயர்கான்

உ௫௬. மன்னற்கு மன்னன் வளவ னகளங்கன்
முன்னர்ப் பணில முழங்குதலுந்—தன்னிற்போய்ப்

உ௫௭. பேணுந் திருமடனு மென்றும் பிரியாத
நாணும் பெருவிருப்பா னல்கூரக்—காணுங்கா

உ௫௮. லேய்ப்ப வெதிர்வரு திரவி யுருவவொளி
வாய்ப்ப முகபங் கயமலர்ந்தாள்—போய்ப்பெருகு

உ௫௯. மீதா ரகலல்குல் வீழ்கின்ற மேகலையும்
போதாத வண்ணம் புடைபெயர்ந்தாள்—சோதி

---

உ௫௪. "தண்டுளை வாம்ப லறுகாலுந் தைவந்து"—எனவும் "தெண்டிரைக்கோன்" (தனிச்சீர்) எனவும்—பி.-ம்.

உ௫௮. "போய்ப்பெயர"—பி-ம்.

உசுo. குழையு நடுவொடுக்குங் கொங்கையுந் தோளும்
பழைய படியே பணித்தாள்—பிழையாத

உசுக. பொன்னித் துறைவன் பொலந்தார் பெறத்தருவார்
தன்னிற் பிறரின்மை சாதித்தாள்—சென்னிக்குப்

உசுஉ. பாராண் முலையாலும் பங்கயத்தா டோளாலும்
வாரா விருப்பு வருவித்தா—ளோரணங்கு

## தெரிவை.

உசுரு. கோது விரவாக் கொழும்பாகு கொய்தளிரின்
போது புலராப் பொலங்கொம்பு—மீது

உசுச. முயலா லழுங்கா முழுத்திங்கள் வானிற்
புயலா லழுங்காப் புதுமின்—னியல்கொண்

உசுரு. டெழுதாத வோவ மெழுகிறைய வண்டு
கொழுதாத கற்பகத்தின் கொந்து—முழுது

உசுசு. மிருளாக் கலாபத் திளந்தோகை யென்றுந்
தெருளாக் களியளிக்குந் தேறல்—பொருளால்

உசுஎ. வருந்தக் கிடையாத மாணிக்கம் யார்க்கு
மருந்தத் தெவிட்டா வமுதந்—திருந்திய

உசுஅ. சோலைப் பசுந்தென்ற றாது வரவந்த
மாலைப் பொழுதின்கண் மண்டபத்து—வேலை

உசுகூ. விரிந்த நிலாமுன்றில் வீழ்மகரப் பேழ்வாய்
சொரிந்த பனிக்கற்றை தூங்கப்—பரிந்துழையோர்

உஎo. பூசிய சாந்தங் கமழப் பொறிவண்டு
மூசிய மௌவன் முருகுயிர்ப்பத்—தேசிகப்

உஎக. பேரிசை யாழ்ப்பாணன் பேதை விறலியொடுஞ்
சேர வினிதிருந்த செவ்விக்கண்—ணேரியுங்

உஎஉ. கோழியும் வேங்கையு முப்பணையுங் கோரமும்
பாழி யயிரா பதப்பகடு—மாழியான்

உஎங. சூடிய வாரமு மாணையுஞ் சோணாடுங்
காடு திரைத்தெறியுங் காவிரியும்—பாடுகெனக்

---

உசுo. "நடுவொடுதுங்கக்"—பி - ம்.

உஎங. "காடுதிரைத்திரைக்கும்"— பி - ம்.

உஎச. கூனை யியாழெடுத்தான் பாணன் கொதித்தெழுந்து
வேனி லரசனுந்தன் வில்லெடுத்தான்—றேனிமிர்

உஎரு. தந்திரி யாழ்ப்பாணன் றைவந்தான றைவந்தான்
வெந்திறன் மாரனுந்தன் வில்லினாண்—முந்த

உஎசா. நிறைநரம்பு பண்ணி நிலைதெரிந்தான் பாணன்
றிறன்மதனு மம்பு தெரிந்தான்—விறலியொடும்

உஎஎ. பாண னொருபாணி கோத்தான் பலகோத்தான்
றாணி தொலையச் சுளிந்துவேள்—மாண

உஎஅ. விசைத்தன பாண னியாழ்ப்பாணி யெய்து
விசைத்தன வேனிலான் பாணி—விசைத்தெழுந்த

உஎகூ. வீணை யிசையாலோ வேனிலா னம்பாலோ
வாணுதல் வீழா மதிமயங்கா—சேணுலாம்

உஅ0. வாடை யனைய மலையா நிலந்தனையும்
கோடை யிதுவென்றே கூறினாள்—நீடிய

உஅக. வாரை முனிந்த வனமுலைமேல் விட்டபனி
நீரை யிதுவோ நெருப்பென்றா—ளூரொலாங்

உஅஉ. காக்குந் துடியை யழிக்குங் கணைமாரன்
றாக்கும் பறையென்றே சாற்றினாள்—சேக்கைதொறும்

உஅங. வாழு முலகத் தெவரு மனங்களிப்ப
வீழு நிலவை வெயிலென்றாள்—கோழிக்கோ

உஅச. னைங்கோ னகளங்க னேழுலகுங் காக்கின்ற
செங்கோல கொடுங்கோல் சிலர்க்கென்றாள்—கங்குல

உஅரு. புலருந் தனையும் புலம்பினா ளாங்குப்
பலரும் பணிந்து பரவ—குலகிரிசூ

உஅசா. ழாழிப் புவன முடைய வுடையபிரான்
சூழிக் கடாயானைத் தோன்றுதலும்—யாழி

உஅஎ. னிழைக்கு மிசைமுதலா வெப்பகைக்கு மாற்றா
துழைக்கு முயிர்தழைப்ப வோடிப்—பிழைத்தனளாய்

உஅஅ. நாட்டுந் திகிரி கிரியினை முதுமுதுகிற்
கட்டுங் கடவுட் கடாயானை—யெட்டுந்

---

உஎரு. "தடவத்தான் றைவந்தான்"—பி - ம்.

உஅகூ. தரிக்கு முலகந் தனிதரித்த கோனைப்
பரிக்கு மயிரா பதமே—செருக்கிப்

உகூ0. பொருந்த நினையாத போர்க்கலிங்க ரோடி
யிருந்த வடவரைக ளெல்லாந—திருந்தா

உகூக. விதையம் பொருதழித்த விந்தமே போலப்
புதைய நடந்த பொருப்பே—சிதையாத்

உகூஉ. திங்கட் குலத்திற்குந் தெய்வப் பொதியிற்கு
மங்கை பழங்குமரி யாற்றிற்கு—தங்கள்

உகூ௩. படிக்கும் பொருநிருப பன்னகங்கள் வீழ
விடிக்கு தனியசனி யேறே—கடிப்பமைந்த

உகூ௪. யாம முரசா விழுந்த நிறைநினது
தாம முரசு தரப்பெற்றே—னும

உகூ௫. விடைமணி யோசை விளைத்தசெவிப் புண்ணின்
புடைமணி யோசை புலர்ந்தேன்—தடமுலையே

உகூ௬. லாறு மலையக்கா லட்டரு டீனசெவியின்
மாறுப் பெருங்காற்றுன் யாற்றினேன்—வேறாக

உகூ௭. கூசும் பணித்திவலை கொண்டுபோ மென்னுயிர்நீ
வீசு மதத்திவலை யான்மீட்டேன்—மூசிய

உகூ௮. காருலா மோதக் கடலமுழங்க வந்ததுயர்
நேரிலா நீமுழங்க நீங்கினேன்—பேரிரவி

உகூகூ. லென்மே லனங்கன் வரவந்த வின்னலெல்லா
நின்மே லனகன்வர நீங்கினே—னின்னுந

௩00. கடைபோக வென்னுயிரைக் காததியேல் வண்டு
புடைபோகப் போதும பொருபபே—விடைபோய்நீ

௩0க. நாட்டுந் தடங்கலக்கின் மாரற் கயில்வாளி
காட்டுந் தடமே கலக்குவாய்—கேட்டருளாய்

௩0உ. கார்நாணு நின்கடத்து வண்டொழியக் காமனார்
போர்நாணின் வண்டே புடைததிர்ப்பாய்—பார்நாதன

௩0௩. செங்கைக் கரும்பொழியத் தின்கைக் கனங்கனார்
வெங்கைக் கரும்பே விரும்புவா—யெங்கட்

---

உகூ௪. (தனிச்சீர்.) "ஏம"—பி - ம்.

௩0௪. குயிரா யுடலா யுணர்வாகி யுள்ளா
யயிரா பதமேனீ யன்றே—பெயராது

௩0௫. திற்கண்டா யென்றிரந்து நின்று ஞுதலாக [கோன்
விற்கொண்ட பேரிளம்பெண் வேறொருத்தி—கொற்கையர்

## பேரிளம்பெண்.

௩0௬. மல்லற் புயத்தரன் றன் மால்யானைக் கைபோலக்
கொல்லத் திரண்ட குறங்கினு—ளொல்லையில்

௩0௭. கோடுங் கொலைகுயின்ற சேடன் குருமணிவேய்ந்
தாடும் படமனைய வல்குலாள்—சேடியாய்த்

௩0௮. தம்மை யெடுக்கு மிடைகடிந்த தம்பழிக்குக்
கொம்மை முகஞ்சாய்த்த கொங்கையாள்—செம்மை

௩0௯. நிறையு மழகா னிகரழித்துச் செய்யா
ளுறையு மலர்பறிப்பா ளொப்பாள்—நறைகமழு

௩௧0. மாலை பலபுனைந்து மான்மதச் சேறு சாந்தெழுதி
வேலை தருமுத்த மீதணிந்து—சோலையில்

௩௧௧. மானு மயிலு மனைய மடந்தையருந்
தானு மழகு தரவிருப்பத்—தேனிமி

௩௧௨. ருற விளம்பாளை யுச்சிப் படுகடுந்
தேறல் வழிந்திழிந்த செவ்விக்கண்—வேறாக

௩௧௩. வாக்கி மடனிறைத்து வண்டு மதுநுரையும்
போக்கி யொருத்தி புகழ்ந்துதர—நோக்கி

௩௧௪. வருந்திச் சிறுதுள்ளி வள்ளுகிரா லெற்றி
யருந்தித் தமர்மே லயர்ந்தாள்—பொருந்து

௩௧௫. மயக்கத்து வந்து மனந்துங்க துங்க
னயக்கத் திருக்கனவு நல்கு—முயக்கத்து

௩௧௬. மிக்க விழைவு மிகுகளிப்பு மத்துயிலு
மொக்க விகல வுடனெழுந்து—பக்கத்து

௩௧௭. வந்து சுடரு மொருபளிக்கு வார்சுவரிற்
றந்த தனதுநிழ லுறநோக்கிப்—பைந்துகிற்

௩௧௮. காசுசூழ் மல்குற் கலையே கலையாகத்
தூசு புடைபெயர்ந்து தோணெகிழ்ந்து—வாசஞ்சேர்

௩௧௯. சூடிய மாலை பரிந்து துணைமுலைமே
லாடிய சாந்த மணிசிதைந்து—கூடிய

௩௨௦. செவ்வாய் விளர்ப்பக் கருங்கண் சிவப்பூர
வெவ்வா ணுதலும் வெயரரும்ப—லிவ்வாறு

௩௨௧. கண்டு மகிழ்ந்த கனவை நனவாகக்
கொண்டு பலர்க்குங் குலாவுதலும்—வண்டுசூழ்

௩௨௨. வேரிக் கமழ்கோதை வேறாகத் தன்மனத்திற்
பூரித்த மெய்யுவகை பொய்யாகப்—பாரித்த

௩௨௩. தாமக் கவிகை நிழற்றச் சயதுங்க
னாமக் கடாக்களிற்று நன்னுதலுந்—தேமொழியுங்

௩௨௪. கண்டது கெட்டேன் கனவை நனவாகக்
கொண்டது மம்மதுசெய் கோலமே—பண்டுலகிற்

௩௨௫. செய்த தவஞ்சிறிது மில்லாத தீவினையேற்
கெய்த வருமோ யிவனென்று—கைதொழுது

௩௨௬. தேறி யொருகாலுந் தேறாப் பெருமைய
லேறி யிரண்டா வதுமயங்கி—மாறிலாத்

௩௨௭. தோழியர் தோண்மே லயர்ந்தாளத் தோழியரு
மேழுயர் யானை யெதிரோடி—யாழியாய்

௩௨௮. மாடப் புகாருக்கும் வஞ்சிக்குங் காஞ்சிக்குங்
கூடற்குங் கோழிக்குங் கோமானே—பாடலர்

௩௨௯. சாருந் திகிரி தனியுருட்டி யோரேழு
பாரும் புரக்கும் பகலவனே—சோர்வின்றிக்

௩௩௦. காத்துக் குடையொன்றா லெட்டுத் திசைகவித்த
லேத்துங் குலகிரியின் மேருவே—போர்த்தொழிலா

௩௩௧. லேனை கலிங்கங்க ளேழனையும் போய்க்கொண்ட
தானைத் தியாக சமுத்திரமே—மானப்போ

௩௩௨. ரிமப ரெழுபொழில் வட்டத் திகல்வேந்தர்
செம்பொன் மவுலிச் சிகாமணியே—கம்பநின்

௩௩௩. பாரிற் படுவன பன்மணியு நின்கட
லீரிற் படுவன நித்திலமு—சேரிமின்

௩௩௪. வெற்பில் வயிரமும் வேந்தநின் சோணாட்டுப்
பொற்பின் மலிவன பூந்துகிலு—மிற்பணியக்

௩௩௫. தொண்டா யிவனது கொங்கைக் கொழுஞ்சுணங்குந்
தண்டா மரையின் றளிர்நிறமும்—பண்டைத்

௩௩௬. துயிலுங் கவர்ந்தநின் றொல்குலத்து நீங்கள்
பயிலுந் திருநாற் படியே—பயலைவள

௩௩௭. மன்னிய தொண்டை வளநாடு வாளியும்
பொன்னி வளநாடு பூஞ்சிலையுங்—கன்னித்

௩௩௮. திருநாடு தேருங் குறையுறப்பச் செய்தாற்
றருநாண் மடமகளிர் தம்மை—யொருநாளவ்

௩௩௯. வேனி லரசன் விடுமே யவனினைய
பானற்க ணாலலா ளுயிர்ப்பரமே—யானைக்காற்

௩௪௦. குன்றே யனைத்தகுநின் கோபுரத்தின் றாங்குமணி
பொன்றே யுலகுக் கொழியுமே—யென்றினைய

௩௪௧. கூறி வணங்கிடு மிவளவுங் கோதைமேற்
சீறி யனங்கன் சிலைவளைப்ப—மாறழியக்

௩௪௨. குத்துங் கடாக்களிற்றுப் போந்தான கொடைச்சென்னி
யுத்துங்க துங்க னுலா.

கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே—வைய
மளந்தா யகளங்கா வாலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளிம் மான.

விக்கிரமசோழனுலா முற்றிற்று.



௩௩௫. "தண்டா நிறையும்"—பி - ம்.

௩௪௧. "செருப்பெயய"—பி - ம்.